

# ஸப்தகிரி

ஜுலை, 1986

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



# ஸப்தகிரி

ஜுலை, 1986

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



" ஸம்ஸாராவர்த்த வேகப்ரசமந
    சுபத்ருக் தேசிக பிரேக்ஷி தோஹம்
ஸந்த்யக் தோந்யை ருபாயை ரனுசித
    சரிதேஷ் வத்ய சாந்தாபிஸந்தம
நிச்சங்கஸ் தத்வ த்ருஷ்ட்யா
    நிரவதிகத்யம் பிரார்த்ய ஸம்ரக்ஷகம் த்வாம்
ந்யஸ்து த்வத்பாத பத்மே வரத நிஜபரம்
    நிர்ப்பரோ நிர்ப்பயயோஸ்மி "

—*நியாஸவிம்சதி.*

*"அடியேன் ஆசார்ய கடாக்ஷம் பெற்றுவிட்டேன். வேறு உபாயங்களைக் கைவிட்டேன். தகாதவைகளைப்பற்றி நினைப்பதை ஒழித்தேன். தத்வஞானம் பெற்றமையால் ஐயப்பாடு நீங்கப் பெற்றேன். உன்னையே உபாயமாக பிரார்த்தித்து உன் திருவடித் தாமரையில் சகல பொறுப்பையும் சமர்ப்பித்தேன். அதனால் பாரமும் அச்சமும் நீங்கப் பெற்றேன்."*

ஜுலை, 1986

# ஸப்தகிரி

இதழ் 2 மலர் 17

தனிப்பிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

உள்ளுறை



**அட்டைப்பட விளக்கம்**

முன்னட்டையில் : பெரியாழ்வார்.
—ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில்.
— திருப்பதி.

பின்னட்டையில் : ஸ்ரீ ஆளவந்தார்-காட்டுமன்னுர் கோயில்.
(புகைப் படங்கள் : S. V. K. S. ஸ்ரீநிவாசன் — திருப்பதி.)

2-வது : ஸாக்ஷாத்கார வைபவம்—ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வரசுவாமி கோயில்,
— ஸ்ரீநிவாச மங்காபுரம்.

3-வது திருச்சானூர் தெப்போற்சவத்தின்போது ஸ்ரீ பத்மாவதித் தாயார்.
(தி. தி. தே. புகைப்படத்துறை)

சிறப்பாசிரியர் :
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர் :
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர் :
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர் :
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு :
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

'அளவுக்கு மீறினால் அமுதமும் விஷமாகும்' என்ற முதுமொழிக்கு முன்னுதாரணமாக மூந்நூறு கூறலாம். பிள்ளைகளிடம் அன்பைச் செலுத்துவதில் தாயைவிட மேலானவள் இருக்க முடியாது. அத்தகைய தாய்காட்டும் அன்பு, அதன் அளவு மீறிடும்போது, அவ்அன்பைப் பெற்றவனே அவளுக்கு ஒரு பிரச்சனையாகிவிடும் அவலத்தை நாம் நம் அன்றாட வாழ்க்கையில் காணலாம். செல்வந்தனான ஒரு தந்தை தன் மகனை தன் செல்வத்தில் அளவுக்குமீறி மூழ்கி யெடுத்திடும்போது, ஒரு காலக்கட்டத்தில் மூழ்கியவனைவிட மூழ்கடித்தவன் படும்பாடு சொல்லிமாளாது. இவ்விருவரு டைய அரவணைப்பிற்கு(?!) அடுத்தப்படியாக ஆனால் அதிக காலத்திற்கு ஒருவனுடைய வாழ்க்கை பொதுவாக வெளியி லேயே கடந்துவிடுகிறது. இக்கடக்கும் காலத்தில், ஒரு குறிப்பிட்ட காலக்கட்டம் கல்விச் சாலையில் கழிக்க நேரிடுகின்றது. இங்குதான் குருகுலவாசத்தில் 'குரு' என்றும், சமய வாழ்க்கையில் 'ஆசார்யர்' 'அடியார்' என்றும், பள்ளியில 'ஆசிரியர்' என்றும், கல்லூரியில் 'விரிவுரையாளர்' என்றும் பல நிலைகளில் பல பெயர்களில் நடமாடும் 'ஒரு தெய்வம்' வாழ்வில் பெரும் பங்கும், மதிப்பும் பெறுகின்றது. கல்விச் சாலைகளில் ஒருவருக்கு அன்பும் அரவணைப்பும் மட்டுமன்றி, அவன் எதிர்காலத்தை நிர்ணயிக்கும், உள்ளத்தை உன்னதமாக்கும், சிந்தனையைச் சிறக்க வைக்கும், அவன் சந்ததியினரின் வளமான வாழ்விற்கு வழிவகுக்கும் வாழ்க்கைக் கல்வியும், நூற்கல்வியும் போதிக்கப்படுகின்றன. இப்போதனையை அவன் ஏற்றுக் கொள்ளும் அளவிற்கு, அதில் அவன் மூழ்கும் அளவுக்கு அவன் மேம்படுகின்றான். அவன் பெறும் கல்வி அறிவு, அதிகமாகும் அளவு, அது விஷமாவதில்லை. அது அவனுடைய வாழ்க்கைக்கு ஓர் அமுதூற்றாகின்றது. தந்தை அகலாக இருந்தாலும், தாய் எண்ணெய்யாக அமைந்தாலும், ஒருவன் அதில் திரியாகத் திகழ்ந்தாலும், அத்திரி சுடர்விட்டு ஒளிர மற்றொரு எரியும் விளக்குத் தேவை. அவ்விளக்குதத்தான் அவனுடைய ஆசிரியராவார்.

மனிதப் பிறவியானது அவ்இறைவன் அளித்த ஒரு பேறாகும். அப்பிறவிப் பேற்றினைப் பயனுள்ளதாக அமைய வேண்டுமாயின் நல்லோர் சேர்க்கையும், நல்லாசிரியனும் தேவை. இவையாவும் தனிமனிதனின் நன்முயற்சி யால் மட்டுமே கிடைத்திடும். மேலை நாடுகளில் ஆசிரியர்களும் மாணவர்களும் நண்பர்களாக பழகுகின்றனர். ஆனால் இப்பாரத மண்ணில் அவர்களுடைய உறவு வித்தியாசப்படுகிறது. பெற்றவர்களுக்கும் உற்றவர்களுக்கும் வழங்காத ஒரு நிலையினை ஒருவன் தன் ஆசிரியனுக்குத் தருகிறான். அவனுக்கு அவ்ஆசிரியன் தாய், தந்தை, தெய்வம் ஆகியவர்களின் ஒரு கலவையாகத் திகழ்வதால்தான் இவ்வுறவுநிலை விசித்திரமாகத் திகழ்கின்றது. ஆசிரியர் மாணவனுக்குக் கல்வி அறிவு புகட்டுவது மட்டுமல்லாமல், மாணவனுடைய நலங்காணும் வகையில் அவனுடைய இன்ப துன்பங்களை அறிந்து, ஒரு நிலையில் அவற்றைக் களையவும் முயற்சிக்கின்றார் என்பது முந்தைய மாணவ தலைமுறையினரின் பெரும் அனுபவமாகும். இந்நிலை இன்றும் பல இடங்களில் இருந்து கொண்டுதான் இருக்கின்றது. இவ்வுறவுக்கு ஆரம்ப அடிப்படையாக விளங்கி யது குரு குலவாசம் என்னும் கல்வி முறையாகும். இன்று போல்,கால நேர பட்டியல் போட்டு அவர்களுடைய கல்வியறிவு வளர்க்கப்படவில்லை. உறங்கும் காலத்தைத் தவிர ஆசானுக்குப் பணிவிடை செய்வதையே மாணவனும், மாணவனின் சந்தேகம் தீர்த்துச் சங்கதிகளைச் சொல்வதையே ஆசானும் தங்கள் கடமையாகக் கொண்டிருந்தனர். கற்றதைச் சிந்திக்கச் செய்யும் ஆற்றலுக்கு இவ்வுறவு வித்திட்டது. இவ்ஆசிரியரின் அருமை பெருமை அறிந்துதான் ஒவ்வொருவரும் அவன் எவ்வளவு தகுதிப் பெற்றிருந்தும் அவர்கள் முனிவர்களாயினும்-அவதாரங்களாயினும்-மதத்தலைவர்களாயினும்-தனக் கென ஒரு 'குரு'வைத் தேடிக்கொண்டனர்.

'குரு சரணாம்புஜ நிர்பரபக்த: ஸம்ஸாராத் அசிராத் பவமுக்த':என்ற ஆதிசங்கரரின் அருட்வாக்கு, குரு இறை வனைவிட பற்றுதலுக்குரியவர் என்பதை நமக்குச் சுட்டிக் காட்டுகின்றது. மேலும் இத்திருவாக்கின் உண்மையைப் பறைச் சாற்றும் வகையில் உத்தாலகனை ஸ்வேத கேதுவும், யாக்ஞவல்கியரை மைத்ரேயியும், வருணனை பிருகுவும், சனத்குமாரரை நாரதரும், பிரஜாபதியை இந்திரனும், சாந்தீபினியை கிருஷ்ணனும், வசிஷ்டரை இராமனும், கோவிந்த முனியை சங்கரரும், யாமுனாசார்யரை இராமாநுஜரும் தங்கள் குருக்களாகக் கொண்ட செய்தி நம்மை மேலும் சிந்தனையிலாழ்த்து கின்றது.

ஆசிரியரின் முக்கியத்துவத்தை அறிந்து தெளிந்து அவர்களுக்கு ஏற்றம் தரவிழைந்த முதல் சமயம் வைணவ மாகும். அன்பு வழி, அருள் நெறி, தொண்டு மனப்பான்மை, சகோதர உணர்வு ஆகியவற்றின் மேம்பாட்டை நமக்கு மிக எளிதாக உணர்த்தியவர்கள் வைணவ ஆசார்யர்கள். வைணவ குருபரம்பரையே நமக்கு ஆசிரியர்-மாணவ உறவின் புனிதத்தையும், சிறப்பினையும் விளக்கிக்கூறும். சரணாகதி மார்க்கத்தின் அருமையையும், பக்தி மார்க்கத்தின் சீரிய திறத்தையும் அடிப்படையாகக் கொண்ட ஆழ்வார்களின் பாடல்களில் பொதிந்துள்ள தத்துவச் சாற்றினையும், சமயப் புதுமையினையும் நமக்கு எளிய முறையில் விளக்கச் செய்து நமது நெஞ்சில் பரம்பொருளின் பேருண்மையை உணரச் செய்த பெருமை அவ்அடியார்களுக்கே உரியது.

ஆசிரியர்கள் எனும் அவ்ஆசார்ய பெருமக்கள் நமக்குக் கிடைத்திருக்காவிட்டால் நமக்கு நம் வாழ்வின் குறிக் கோள் புரிந்திருக்காது; அதனை அடைய வழி தெரிந்திருக்காது. பக்தனையும் பரமனையும் பிரிக்கவொட்ட முடியா ஓர் ஆன்மீகப் பாலமாக அமைந்திருந்த அவ்ஆசார்ய பரம்பரையினை மனதினால் சிந்தித்து, அவர்கள் வழிவரும்—அவர்கள் பாதையை பின்பற்றும் 'ஆசிரிய சமூகத்திற்கு', நாம் இன்று பெற்று அனுபவித்துவரும் வாழ்க்கைக்கு நன்றி காட்டும் முகத்தான், அவர்கள் தாள் பணிந்து பேரருளாளனின் திருவருள் பெற முனைவோமாகுக!

# செய்திச் சுருக்கம்

## புதிய நியமனம.

ஆந்திரா புகழ் பிரபல அஷ்டா வதானி திரு. மேடஸானி மோகன் அவர்கள் தி. தி. தேவஸ்தான அன்ன மாச்சார்யா திட்டத்தின் ஒத்திசை வாளராக (Co-ordinator) மேலாண் மையால் நியமிக்கப்பட்டுள்ளார். ஆந்திர மாநிலத்தில் நூற்றுக்கும் மேற்பட்ட பல அஷ்டாவதானம், சதாவதானம் நிகழ்ச்சிகளை நிகழ்த்தி யுள்ளார். இப்புதிய பதவி ஏற்கும் முன்பு, அவர் 'ஸப்தகிரி' இதழின் தெலுங்கு பதிப்பிற்குத் துணையாசிரி யராகத் தற்காலிகமாகப் பணிபுரிந்து வந்தார்.

## 41வது தியாகராஜ ஆராதனை விழா :

திருப்பதி ஸ்ரீதியாகராஜா அறக் கட்டளை மற்றும் விழாக் குழுவின் சார்பில் திருப்பதியில் ஸ்ரீ தியாகராஜ ரின் 41வது ஆராதனை விழா 21-6-86 முதல் 27-6-86 வரை வெகு விமர்சை யாகக் கொண்டாடப்பட்டது. 21-6-86 அன்று மாலை வேத பாரா யணத்துடனும், திரு. சச்சிதானந்தம் அவர்களின் இறை வணக்கப் பாட லுடனும் விழா இனிது துவங்கியது. விழாக் குழுவின் செயலாளர் திரு. எம். கிருஷ்ணசுவாமி அவர்கள் விழாவுக்கு வருகை புரிந்தோரை வர வேற்றுப் பேசுகையில், விழாவை துவக்கி வைக்க வருகை புரிந்திருந்த நியூயார்க், ஐக்கிய நாட்டு சபையின் முன்னாள்நேருதவிச்செயலர் திரு.சி.வி. நரசிம்மன் அவர்களை அறிமுகப்படுத்தி யும், கர்நாடக இசை இன்று இளை ஞர்களிடையே பரவ வேண்டியதன் அவசியத்தையும் பற்றிப் பேசினர். பின்னர் விழாத் தலைவரும், தி.தி.தே' செயலாட்சித் தலைவருமான திரு. எஸ். லக்ஷ்மி நாராயணு அவர்கள் தம் தலைமையுரையில் கர்நாடக இசை இன்று மக்களிடையே சிறிது சிறிதாக அதே நேரத்தில் வெகு தீவிரமாக இடம் பெற்று, அவர்களை தம்பால் பெரிதும் ஈர்த்து வருகிறது என்றும் கூறினர். பின்னர் கர்நாடக இசை யின் மேலாண்மையை பொது மக் களுக்கு மேலும் உணர்த்தும் வகை யில் தி. தி. தேவஸ்தான மேலாண்மை அன்னமாச்சார்யா உள்ளிட்டுப் பல் வேறு கர்நாடக இசைக் கலைஞர்களின் பாடல்கள் பிரபல பாடகர்களால் ஒலிப்பதிவு நாடாக்களில் பதிவு செய்யப்பட்டு, குறைந்த விலையில் அவை விற்கப்பட்டும் வருகின்றன என்றும் பேசினர். பிறகு இவ்விழா வினைத் துவக்கி வைத்து உரையாற் றிய ஓய்வு பெற்ற ஐ. சி. எஸ். அதி காரி திரு. சி. வி. நரசிம்மன் அவர் கள் தம் சிறப்புரையில் அமெரிக்கா வில் இந்துக் கோயில்களைக் கட்டி யதற்கு பெரிதும் உதவியாக இருந்த தி. தி. தே. முன்னாள் பொறுப் பாண்மைக் குழுத் தலைவர் திரு. சி. அண்ணாராவ் அவர்களின் உதவியை நினைவு கூர்ந்து பின்னர் தொடர்ந்து பேசுகையில் இறைவனை அடைய இன்று நமக்கு மிகவும் ஒப்பற்ற சாத னமாக இருப்பது இசை ஒன்றுதான் என்று குறிப்பிட்டு, சில தியாகராஜ கீர்த்தனைகளின் பெருமையையும், ஸ்ரீ தியாகராஜரின் எளிமையான இறை பக்தியினையும் விளக்கிப் பேசினர். நாதோபாஸனை மூலம் இறைவனைக் கண்ட ஸ்ரீ தியாகராஜர் இன்று இருக் கும் சூழ்நிலையில் நமக்கு ஒரு சிறந்த ஆன்மீக வழிகாட்டி என்று குறிப் பிட்டார்.

இறுதியில் ஸ்ரீ தியாகராஜ கட்டிடக் குழுத் தலைவர் திரு. கே. வி. சுப்ர மண்யம் அவர்கள் நன்றி நவின்றார்.

இதனைத் தொடர்ந்து திரு.ரவிக்கிரண் குழுவினரின் கோட்டு வாத்திய இன் னிசைக் கச்சேரி நடைபெற்றது. ஏழு நாட்கள் நடைபெற்ற இவ்இசை விழாவில் திரு. என். ரமணி அவர் களின் புல்லாங்குழல் இசைக் கச்சேரி யும், திரு. டி. லோகநாத சர்மா, மதுரை டி. என். சேஷ கோபாலன், ஆகியோரின் வாய்ப்பாட்டு இசைக் கச்சேரிகளும்,மாஸ்டர். யு. ஸ்ரீநிவாஸ் அவர்களின் மேண்டலின் இசைக் கச்சேரியும், தெனுலியைச் சார்ந்த திருமதி. மண்டரி லக்ஷ்மி அவர் களின் ஹரிகதை நிகழ்ச்சியும், திருமதி. சித்திரா விஸ்வேஸ்வரன் அவர்களின் பரத நாட்டிய நிகழ்ச்சி யும் நடைபெற்றன.

23-6-86 அன்று முன்னாள் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலை வரும் மற்றும் புதுதில்லி தர்ம பிர திஷ்டானத்தின் தலைவருமான டாக் டர். சி. அண்ணாராவ் அவர்கள் காலஞ்சென்ற உள்ளூர் பிரமுகர் களும், 1943 முதல் நடைபெற்று வரும் தியாகராஜ ஆராதனை அமைப்பு நிகழ்ச்சிகளில் பெரும்பங்கு வகித்தவர்களுமான பி. கே. விஜயராகவன், பி. முனிரெட்டி, கே. எல். சம்பத் குமாராசாரியார் ஆகியோரின் திருவுருவப் படங்களைத் திறந்து வைத்தார். 24-6-86 அன்று பிரபல மிருதங்க வித்வானாக விளங் கிய பத்மஸ்ரீ கலைமாமணி, திரு. சி. எஸ். முருக பூபதி அவர்களுக்கு 'விழாக் குழுவினர்' சார்பில் திரு. எஸ். லக்ஷ்மி நாராயணு அவர்கள் ஸப்தகிரி சங்கீத வித்வான் மணி என்ற சிறப்புப் பட்டம் அளித்து கௌரவித்தனர்.

*

# ஸ்ரீ லக்ஷ்மி தத்துவம்

'பூரம்' சத்தியமூர்த்தி
சென்னை

திருமகள், பெரிய பிராட்டி, பூவின்மிசை நங்கை என்றெல்லாம் சொல்லப்படுகிற லக்ஷ்மி, செல்வத்திற்கு அதிதேவதையாகிறாள். இவள் விஷ்ணுவின் பத்தினியாய் அவனோடு இணைபிரியாமல் எப்போதும் அவன் திருமார்பிலே நித்தியவாசம் பண்ணுகிறாள் என்பது தத்துவம். எம்பெருமான் எவ்விடத்தே இருந்தாலும் அவ்விடத்தே அவனுக்குத் துணையாக இருப்பதே அவளுடைய தன்மையாகும். देवत्वे देवदेहेयं मनुष्यत्वे च मानुषि என்கிறபடியே எம்பெருமான் தேவ சரீரத்தோடு இருக்கும்போது இவளும் தேவ சரீரத்தோடும், அவன் மனுஷ்ய சரீரத்தோடு அவதரிக்கிற போது இவளும் மனுஷ்ய சரீரத்தோடும் அவதரித்து இணைந்து நிற்கிறாள். இராமனாக அவன் அவதரித்த காலத்தில் இவள் சீதாப்பிராட்டியாகவும், அவன் கண்ணனாக அவதரித்தபோது இவள் ருக்மிணிப் பிராட்டியாகவும் அவதரித்தாள். அர்ச்சாவதாரங்களிலும் திருமலை ஸ்ரீநிவாஸனுக்கு பத்மாவதி தேவியாகவும், திருவரங்கத்தில் அழகிய மணவாளனுக்கு ரங்கநாயகித் தாயாராகவும், காஞ்சிபுரத்தில் வரதராஜனுக்குப் பெருந்தேவித் தாயாராகவும் அவதரித்து சேதனர்களாகிற ஜீவாத்மாக்களுக்கு அருள்புரிகிறாள்!

ஆகவே லக்ஷ்மியானவள் எம்பெருமானுக்கு ஏற்றம் தருகிறவளாய், பூரண சந்திரனுக்கு நிலவு போல, அவனை விட்டுப் பிரிந்து செல்ல முடியாதவளாய், ஜீவாத்மாக்களாகிற நமக்கெல்லாம் சரண்யமான கிருபா நிதியாய் இகத்தில் சகல ஐச்வர்யங்களையும் தருவதோடு மட்டுமல்லாமல் பரத்திலும் எம்பெருமானோடு இணைந்து இருக்கிற நிலையாகிற முக்தியையும் வாங்கித் தந்தருள்கிற கருணைச் செல்வியாய் விளங்குகிறாள்!

'லக்ஷ்மி' என்கிற சொல்லுக்கு அடையாளம் என்று பொருளாகும். (लक्षयति इति लक्ष्मि) இவள் அந்த எம்பெருமானுக்கு அடையாளமாக அமைகிறாள் என்பது தத்துவம். எம்பெருமானாகிற புருஷோத்தமன் பூரணத்துவம் பெறுவது இந்த லக்ஷ்மியாலேதான்! அவள் இவனோடு இணைந்து நிற்பதாலே, அவனுக்குப் பத்தினியாக இவள் ஆவதினாலே தான், எம்பெருமான் ஆதி பரம் பொருளாக புருஷோத்தமனாக ஆகிறான். யாருக்கு லக்ஷ்மி பத்தினியாக ஆகிறாளோ அவனே பரமாத்மாவாகப் 'பரத்வத்'தை அடைகிறான் என்று புருஷஸூக்தம் சொல்வது கவனிக்கத் தக்கது. "திருவில்லாத் தேவரைத் தேறேல்மின் தேவு!" என்று திருமழிசையாழ்வார் சொல்வதும் இதனால் தான்! எம்பெருமான் பரம புருஷன், நமக்கெல்லாம் சிறப்பை உண்டு பண்ணுகிற எஜமானன். 'சேஷி' என்றால் அவனுடைய பத்தினியாகிற லக்ஷ்மியும் நமக்கு எஜமானியாக, 'சேஷி'யாக ஆகிறாள்.

வேதங்கள் இறைவனைப் புருஷன் என்றும், லக்ஷ்மியைப் பத்தினி என்றும் சொல்வதால் இருவரும் வேறு வேறு என்றுதான் கொள்ள வேண்டுமே தவிர இருவரும் ஒருவரே என்று சொல்வது பொருந்தாது. ஆகவே லக்ஷ்மி தத்துவம் என்பது தனியே என்றும் அது ஜீவாத்ம தத்துவம் என்றும் சொல்லப்படுகிறது. ஜீவாத்மா தங்கள் பிறவியில் தோன்றிய மலங்களை அகற்றி பரமாத்மாவின் நிலையடைந்து அதோடு இணைந்து நிற்கிற நிலையில் அது இரண்டல்லாமல் ஒன்று என்று சொல்லலாம் போலே, இணைந்து நிற்குமாப்போலே, லக்ஷ்மியும், பரமாத்மாவும் இருக்கிறார்கள் என்பது தத்துவம். பரமாத்மா மூலப்பிரகிருதியை ஜடமாகச் சொன்னால் அந்த மூலப்பிரகிருதியாகவே லக்ஷ்மியைச் சொல்ல முடியாது. ஏனெனில் பத்தினியானவள், அசேதனமானவள். ஆனால் அறிவு பூர்வமானவள் என்று வேதங்கள் கூறுவதால் அவள் மூலப்பிரகிருதியாகிற எம்பெருமானிலிருந்து வேறுபட்டவளாகிறாள்.

பிரம்ம சூத்திரத்தில் வாதராயணர் 'ஹரியாகிற இறைவன், நரநாரீமயன், சந்திரனில் நிலவுபோலே - நாம் நிலவினால் சந்திரனை எப்படி அறிகிறோமோ அப்படி லக்ஷ்மியினால் தான் இறைவனை அறிகிறோம்!' என்கிறார். (नरनारीमयो हरिः ज्योत्स्नेव हिमदीधितेः) நிலவினாலே சந்திரனுக்கு ஏற்றம் ஏற்படுவதுபோலே லக்ஷ்மியினாலே இறைவனுக்கு ஏற்றம் ஏற்படுகிறது. பண்ணையும் ஓசையும் போலே என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். பூவும் மணமும் போல என்பது பொருந்தாது. ஏனெனில் லக்ஷ்மியை வெறும் பண்பு என்று கொள்ளுதல் தவறு. அதைப் பொருளாக அசேதனமாகக் கொள்வதே சரியென்று படுகிறது. பூவும் மணமும் என்பதில் மணம் பண்பு தானே தவிரப் பொருளாவதில்லை.

வைணவக் கொள்கையில் அடிப்படையான கொள்கை அந்தப் பரமாத்மாவாகிற விஷ்ணு உலகம் முழுவதும் வியாபித்து நிற்பதனால் உலகமும் அதனுள் அடங்கிய ஸகல வஸ்துக்களும் அவனுடைய சரீரமாகிறது

# சிவபக்தன் ஆஞ்சநேயர்!

ஆஞ்சநேயரை இராமபக்தர் என்பர். அவரைச் சிறந்த சிவபக்தராகக் காட்டுகின்றது ஒரு கதை. கௌதம முனி தம்முடைய ஆசிரமத்தில் சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து பூஜை செய்து வந்தார். அதைக் காண பிரகலாதன், பாணன் போன்ற அசுரபுத்திரர்களும் வருவார்கள்.

ஒரு சமயம் பிரகலாதன் முதலானோர் வந்த போது அவர்களோடு விருஷபர்வா என்ற அசுரர் தலைவனும் வந்தான். நாரதர், தும்புரு மற்றும் பல மகரிஷிகளும் அங்கே குழுமியிருந்தனர். அங்கே சிவபக்தன் கௌதம முனியின் சீடன் சங்கராத்மாவின் செய்கைகள் விருஷபர்வாவுக்குப் பிடிக்கவில்லை. கோபம் கொண்டு அவன் தலையைச் சீவிவிட்டான். அருமையான சீடன் மாண்டதைக் கண்டு கௌதமரும் உயிர் விட்டார். அப்போது மும்மூர்த்திகளும் தேவர்கள் சூழ அங்கே தோன்றினர். ஈசன் கௌதமரையும், அவருடைய சீடனையும் உயிர் பெற்றெழச் செய்து, 'அன்பர்களே சங்கராத்மா என் ஆத்ம பக்தன். வெளியில் என்ன நடக்கிறது என்பதனை அவன் கவனிப்பதேயில்லை. அவனுக்கு நான்தான் உலகம். என்னைத் தியானிப்பதே அவன் செயல். இதே போல் மற்றொரு பக்தன் எனக்கிருக்கின்றான். அவனையும் காட்டுகின்றேன்' என்றார்.

அஞ்ஞான்று வீணையின் அற்புத கானம் அங்கே பரவியது. அதன் இனிமையில் அவர்கள் மெய்ம்மறந்து நின்றனர். அப்பொழுது ரிஷப வாகனத்தில் சிவபெருமான் காட்சி அளிக்க அருகில் ஆஞ்சநேயர் வீணைகானம் செய்து கொண்டிருப்பதைக் கண்டனர். ஆஞ்சநேயரின் பக்திப்பரவசநிலை அங்கிருந்தோரை உருகச் செய்தது. 'ஆஞ்சநேயா! நீயும் ரிஷபத்தின் மீது ஏறிக்கொள். என் அருகிலிருந்தபடி கானம் பாடலாம்' என்றழைத்தார் சிவபெருமான். 'மகேசுவரா! நான் எவ்வாறு தங்களுக்குச் சமமாக அமர்ந்து வாசிப்பேன்; வேண்டாம். தாங்கள் என் தோளில் அமர்ந்து கொள்ளுங்கள். தங்களைச் சுமந்தவாறு நான் கானம் செய்வேன். அதுவே நான் வேண்டுவது' என்றார் ஆஞ்சநேயர். பரமசிவனும் பக்தனுடைய வேண்டுகோளைத் தட்டாது ரிஷபத்தைவிட்டிறங்கி ஆஞ்சநேயருடைய தோள்களில் ஏறி அமர்ந்தார். ஈசனைத் தாங்கியபடியே மெய்ம்மறந்து கானம் செய்தார் மாருதி. அந்த காட்சியைக் கண்ட கௌதமர் முதலானோர் ஆஞ்சநேயரைப் பலவாறு பாராட்டினர்.

—உ. வெங்கடேசன்—மயிலாடுதுறை.

என்பதும் அவனே சரீரத்திற்கு ஆன்மாவாக இருக்கிறான் என்பதும் ஆகும். அதாவது பரமாத்மா ஆன்மா என்றால் ஜீவாத்மாக்கள் அவனையே சார்ந்திருக்கிற சரீரமாகின்றன. அவன் எஜமானனாகிறான். அவன் ஸ்வாமி; ஜீவாத்மாக்கள் அவனுடைய சொத்துக்கள். அவன்தான் நம்மைப் பேணிப் பாதுகாக்கிறவன்; நாம் அவனையே சார்ந்திருக்கிற அவனால் காப்பாற்றப்படுகிற பத்தினியாக-பெண்ணாக ஆகிறோம். புருஷன் என்ற சொல், வேண்டியதைக் கொடுக்கிறவன் என்ற பொருளைத் தருகிறது. (पुरू सुनोति इति पुरुषः) ஜீவாத்மாக்கள் இந்த லக்ஷ்மியின் மனோபாவத்தை அடையும்போது அந்தப் பரமாத்மாவாகிற எம்பெருமான் தானே ரக்ஷிக்கத் தொடங்குகிறான். அதுவே ஜீவாத்மாக்களின் முக்திக்கு வழி காட்டியாகி விடுகிறது!

இப்படிப்பட்ட மனநிலையைத்தான் எல்லா ஆழ்வார்களும் அடைந்து இறைவனிடத்தில் தங்கள் பக்தியையும் காதலையும் வளர்த்துக் கொண்டார்கள்! இந்த பக்திப் பெருங்காதலில் ஆழ்ந்தவர்கள் என்பதால்தான் இவர்கள் ஆழ்வார்கள் என்று சொல்லப்படுகிறார்கள். அதனால்தான் இறைவனைக் 'கண்ணுக்கு இனியன்', என்று புகழ்பாடினார்கள். இதனால்தான் பெரியாழ்வார் "நாவலன் தீவினில் வாழ் நங்கைமீர்காள்!" என்று எல்லா ஜீவாத்மாக்களையும் அழைக்கிறார். "நமக்கும் பூவின்மிசை நங்கைக்கும் இன்பா!" என்று பட்டத்தரசியாகிற லக்ஷ்மிக்கும் நமக்கும் உள்ள சாம்யத்தைப் பெரியாழ்வார் உணர்த்துவதையும் நாம் கவனிக்க வேண்டும். இராமன் காட்டுக்குக் கிளம்புகிற சமயத்தில் இலக்ஷ்மணன், இராமனிடம், "நானும் ஸீதையும் உன்னை விட்டு என்றும் பிரியோம்!" என்று உரிமையோடு பேசுகிற நிலையும் இந்த ஜீவாத்ம தத்துவத்தை உணர்த்துவதுதான்!

சென்ற இதழ்த் தொடர்ச்சி.........

உழவனுகிய பக(வ)னுக்குக் கூர்மை யான புத்தியும் அதிகமான உழைப் பும் அவசியம்.

"भग: पुरंधिर्जिन्वतु प्रराये"

பக: புரந்திர்ஜின்வது ப்ரராயே
(ருக் வேதம் 6-49-14)

"भगं धियं वाजयन्त: पुरंधिं"

பகந்தியம் வாஜயந்த: புரந்திம்
(ஷ் 2-39-10; மைத். ஸம். 4-14 9; தை. ப்ரா. 2-8-6-3)

"भगो अर्यमा सविता पुरंधि:"

பகோ அர்யமா ஸவிதா புரந்தி:
(ருக்வேதம் 10-85; அவர்வ. வே. 14-1-50; ஸாமவே, மந்ரப்ரா—1-2-16)

---

# பகவன்

---

மேலே காட்டப்பட்ட வேத வாக் கியங்களில் "புரந்தி:" என்னும் அடைமொழி பக(வ)னுக்குக் கொடுக் கப்பட்டுள்ளது. "பேரறிவு படைத் தவன்—கற்பனு சக்தி மிகுந்தவன்—பெரும் உழைப்பாளி" என்பவை இச்சொல்லின் பொருள்கள்.

பகவ(உழவ)னுக்கு, தாராளமாக அள்ளிக்கொடுக்கும் இயல்பு உண்டு:

"भगो ह दाता भग इत्प्रदाता"

பகோ ஹ தாதா பக இத் ப்ரதாதா
(க்ருஷ்ண யஜுர்வேதம். தை, ப்ரா—3-1-1-8.)

"பக(வ)ன் தான் கொடையாளி. பக(வ)னே பெருங்கொடையாளி" என்பது இவ்வேதவாக்கியத்தின் கருத்து.

"இரவா ரிரப்பார்க் கொன்றீவர்
கரவாது
கை செய்தூண் மாலை யவர்"

என்னும் குறள் இக் கருத்தையே தெரிவிக்கிறது. "கை செய்து=தன் கையால் (உழுதலைச்) செய்து, ஊண் மாலையவர்=உண்ணுதலை இயல்பாக உடையவர். "தம் கையால் உழுதுண்டலை யியல்பாகவுடையவர். பிறரைத் தாமிரவார்; தம்மையிரப்பார்க்கு அவர் வேண்டிய தொன்றனைக்கரவாது கொடுப்பர்" (கரவாது =ஒளிக்காமல்) என்று இக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர், கை செய்தூண் மாலையவரென்பது "ஒரு ஞான்றும் அழிவில்லாதசெல்வமுடையரென்னும் ஏதுவையுட் கொண்டு நின்றது" என்று இதன் கருத்தை விளக்குகிருர். நெற்றி வியர்வை நிலத்தில் விழுமாறு மெய் வருந்தி உழைத்து அவ்வுழைப்பின் பயனுகப் பெறப்படும் செல்வம் எஞ்ஞான்றும் அழியாத் தன்மையதல்லவா? அச் செல்வத்தைப் பெற்றவன் பிறரை இரவான். தம்மையிரப்பார்க்கும் இல்லையென்னுமல் கொடுப்பான். மேலே காட்டப்பட்ட வேதவாக்கியமும் குறளும் ஒரே கருத்துள்ளனவாம். ஷ் குறளின் உரையில் கூறப்பட்டபடியே பக(வ)ன் பெரும் செல்வந்தனுகவும் அதைப் பிரித்துவழங்கு பவனுகவும் வேதத்தில் வருணிக்கப் படுகிறுன்:

"भग: पुरंधि र्जिन्वतु प्र राये"

பக: புரந்திர் ஜின்வது ப்ர ராயே
(ருக்வேதம்—6-49-14)

"भगश्च मे द्रविणञ्च मे"

பகச்ச மே த்ரவிணஞ்ச மே
(வாஜ. ஸம்ஹிதை—18-8; தைத்—ஸம்ஹிதை—4-7-3-1; மைத்—ஸம்ஹிதை—2-11-3)

"பெரும் உழைப்பாளியான பக(வ)ன் நம்மைச் செல்வம் பெறுமாறு தூண்டுதல் செய்யவேண்டும்" எனக்கு பக(வ)னும் பணமும் (வேண்டும்)" என்பது இவ்வாக்கியங்களின் கருத்துக்களாகும்.

பக(வ)ன் ஏராளமான இரத்தினங்களை வைத்திருப்பான். அவற்றைப் பிறருக்கும் பங்கிட்டுக் கொடுப்பான்.

"भगञ्च रत्नं विभजन्त मायो:"

பகஞ்ச ரத்நம் விபஜந்த மாயோ:
(ருக்வேதம்—5-49-1)

"भगं न कारे महिरत्न धीमहि"

பகந்நகாரே மஹிரத்நதிமஹி
(ருக்வேதம்—1-141-10)

"மனிதர்களுக்கு இரத்தினங்களைப் பங்கிட்டுக் கொடுக்கும் பக(வ)னையும் (நாம் அடைகிறோம்)

"பெரும் அளவில் இரத்தினங்களையுடைய அக்னியே! பக(வ)னைப்போல் உன்னைத் துதிக்கிறோம்" என்பது ஷ் வாக்கியங்களின் பொருள்.

"भगो वां विभजतु इति हि भगस्य विभजनं प्रसिद्धम्"

(ருக்வேதம்—5-49-1 பாஷ்யம்)

என்பது இங்குள்ள வேத பாஷ்யம். "பக(வ)ன் உங்களுக்குப் பிரித்துக் கொடுக்கட்டும்" என்கிறபடி பக(வ)னுக்குப் பங்கிடும் வேலை பிரசித்தி பெற்றதல்லவா? என்பது இதன் கருத்து.

நாவல்பாக்கம்
ஸ்ரீ தேவநாதாச்சாரியர்

"स हि रत्नानि दाशुषे सुवाति सविता भग:।
तं भागं चित्रमीमहे"

ஸஹி ரத்நாநி தாசுஷே ஸவிதா பக: |
தம் பாகம் சித்ரமீமஹே
(ருக்வேதம்—5-82-3]

என்னும் ருக்வேத மந்திரம்;(எல்லோரையும்) தூண்டுதல் செய்யும் அந்த பக(வ)ன் (யாகத்தில்) அவிஸ்ஸுக்களைக் கொடுக்கும் எனக்கு இரத்தினங்களை அனுப்புகிறுன். இது பிரசித்தமான விஷயம். அந்தப் பக(வ)னைப் பணம் கொடுக்குமாறு இரக்கின்றோம்" என்னும் கருத்துடையது.

"मात्राविभिन्नदेहस्य सप्त सप्ताश्वसारथे: ।
निपेतुरण्डखण्डानि यासु यासु स्थलीषु च ।
तासु तास्वाकरा आसन्"

மாத்ராவிபின்னதேஹஸ்ய ஸப்த
ஸ்ப்தாச்வஸாரதே: |
நிபேதுரண்டகண்டாநி யாஸு யாஸு
ஸ்தலீஷு ச |
தாஸு தாஸ்வாகரா ஆஸன்''

*(ரத்நபரீக்ஷா-ஈச்வரதீக்ஷிதர் என்பவர் இயற்றியது. ஸரஸ்வதிமகால் சுவடி. B, 2039 எண்ணுடையது)*

என்னும் சுலோகம் ''ரத்ந பரீக்ஷா'' என்னும் நூலில் உள்ளது. இரத்தினங்களின் உற்பத்தி, குணங்கள், தோஷங்கள், கிடைக்குமிடம் இது போன்ற விஷயங்களை இந்நூல் விளக்குகிறது. பூமியில் பலவிடங்களிலும் சுரங்கங்களுள் இரத்தினங்கள் மறைந்து கிடைக்கின்றன. அதனால் பூமியை (இரத்தினகர்ப்பா) என்பர். ''இரத்தினங்களைத் தன் வயிற்றில் கருவாகத் தரித்திருப்பவன்'' என்பது இப்பெயரின் கருத்து. இக்கனிகள் பூமிக்கு எங்கிருந்து வருகின்றன? இக்கேள்விக்கு மேற்கண்ட சுலோகங்கள் பதில் கூறுகின்றன.

''ஏழு குதிரைகளைப் பூட்டிய இரதத்தில் பிரயாணம் செய்யும் சூரியனுடைய வடிவத்தின் ஒரு சிறு பகுதி பிளவுண்டது. அந்தத் துண்டு பலவாகச் சிதறிப் பற்பல இடங்களிலும் போய்விழுந்தது. அந்த இடங்களிலெல்லாம் (பலவகையான இரத்தினங்களையுடைய) கனிகள் தோன்றின'' என்பது மேற் சுலோகங்களின் கருத்து. பரந்த வானவெளியில் பல கோடி மைல்களுக்கப்பாலிருந்து சோதிவடிவமாகிய இரத்தினங்களை அன்புடன் அனுப்பியருளும் பக(வ)ன் தேவர்களுள் சிறந்தவனாகிய சூரியனே. அவ்வாறு பூமியில் சுரங்கங்களில் புதைந்து கிடக்கும் இரத்தினங்களைக் கடும் முயற்சியுடன் தோண்டி எடுத்து உலகினருக்குப் பகிர்ந்து கொடுக்கும்-பகவன் - மானிடர்களுள் சிறந்தவனாகிய உழவனே. சுரங்கங்களில் வேலை செய்பவனும் பூமியைப் பிளப்பதனால் உழவனைப் போலவே 'பகவன்' எனப்படுதல் பொருந்தும். பகவன் எனப்படும் சூரியன், பூமிக்கும் மற்ற கிரகங்களுக்கும், தன் கோளத்தின் ஒரு பகுதியைப் பிளந்து அதன் மூலம் இரத்தினங்களை அனுப்புவதாக மேற் வேத வாக்கியமும் புராண வாக்கியமும் கூறுகின்றன. இது விஞ்ஞான ஆராய்ச்சிக்காரர்களால் ஒப்புக் கொள்ளப்படும் உண்மையாகும். இப்படிப் பல கிரகங்களுக்கும் இரத்தினங்களையும் பொன்னையும் அனுப்பும் பக(வ)ன், தன்னிடம் எவ்வளவு பெரிய பொற்குவியலை வைத்திருக்க வேண்டும் என்பதை அளவிட்டுக் கூற இயலாது. ஆதலின் வேதம் பல காலும் பக(வ)னை இரத்தினங்கள் மிகுந்தவன் என்றும், அவற்றைப் பிறருக்குப் பங்கிட்டுக் கொடுப்பவன் என்றும் துதிக்கின்றது. அவ்வாறே தெய்வீகமான பக(வ)னுடைய பிரதிநிதியாக விளங்கி, அவ்விரத்தினங்களைத் தோண்டி எடுத்து ஏனையோருக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் உழவனையும், ''கைசெம்தூண் மாலையவர்'' என்று தமிழ்மறையும் புகழுகின்றது. ''ஒரு ஞான்றும் அழிவில்லாத செல்வமுடையவர்'' என்றார் உரையாசிரியரும். இவ்விஷயத்தில் வேதவாக்கியங்களுக்கும் குறள் வாக்கியங்களுக்கும் உள்ள கருத்தொற்றுமை நோக்கற்பாலது.

'' உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்
மற்றெல்லாந்
தொழுதுண்டு பின்செல்பவர்''

என்னும் குறள் உழவனை மற்றவர் யாவரும் துதித்துத் தொழுதுண்டு பின் செல்பவரென்றும், உழவனது வாழ்வே சிறந்ததென்றும் கூறுகிறது.

'' भगमुग्रोऽवसे जोहवीति ''

பகமுக்ரோவஸே ஜோஹவீதி
(ருக்வேதம்—7-38-6)

'' भगः पन्यमानः ''

பக : பன்யமான :
*(காடகஸம்ஹிதா—34-14)*

'' भगं भक्ती हुवामहे ''

பகம் யந்தோ ஹவாமஹே
*(அதர்வணவேதம்—5-7-4)*

''आध्रश्चिद्य मन्यमानस्तुरश्चिद्राजा चिद्यं
भगं भक्षीत्याह''

ஆத்ரச்சித்யம் மந்யமானஸ்துரச்சித்
ராஜா சித்யம் பகம் பக்ஷீத்யாஹ
(ருக்வேதம்—7-41-2.)

1. பக(வ)னைத் துதிசெய்து, தம்மைக் காப்பதற்காக (எல்லோரும்) அழைக்கின்றனர்.

3. பக(வ)னைச் சென்று கூப்பிடுவோம்.

2. பக(வ)ன் துதிக்கப்படுகிறான்.

4. வறுமையிலுள்ளவனும் செல்வம் நிறைந்தவனும் பக(வ)னைப் பார்த்து, ''உனது செல்வத்தை(உணவுப் பொருளை)ப் பங்கிட்டுக் கொடு'' என்று வேண்டிக்கொள்வான்'' என்பது முறையே மேற்கூறிய நான்கு வாக்கியங்களின் பொருள்.

'' भगस्येव भुजिं हुवे ''

பகஸ்யேவ புஜிம்ஹுவே
(ருக்வேதம்—8-102-6; **தைத்—**ஸம்—3-1-11-8; மைத்—ஸம் — 4-11-2.)

''பக(வ)னுடைய போகத்தை(அழைப்பதை)ப் போல் (அக்நியை) அழைக்கிறேன்'' என்பது இதன் பொருள். இவ்வாறு உழவனை எப்படியெல்லாம் நாயனார் சிறப்பித்துக் கூறுகிறாரோ அவ்வாறே பற்பல வேதவாக்கியங்கள் பக(வ)னைச் சிறப்பித்துக் கூறுகின்றன. இதுபோல் மற்றும் பல வாக்கியங்கள் உள. விரிவைத் தவிர்க்க வேண்டி ஈண்டு அவற்றை விவரிக்காது விடுத்தனம். ஊக்கமுள்ளவர்கள் கண்டு அனுபவிக்கலாம். நான்கு வேதங்களிலும் அவற்றைச் சார்ந்த கல்ப ஸூத்திரங்களிலும் பாஷ்யங்களிலும் பக(வ)னைப் பலவாறாகச் சிறப்பித்துக் கூறும் வாக்கியங்கள் யாவும் உழவனுடைய நிலை

(41-ம் பக்கம் பார்க்க)

# துஞ்சத்து எழுத்தச்சன்

திரு. கி. அரங்கசாமி,எம்.ஏ.,-பட்டாம்பி.

இராமாயணத்தைக் கம்பர்பெருமான் தமிழில் மொழிபெயர்த்ததைப் போலவே மலையாள மொழியில் இராமாயணத்தை மொழிபெயர்த்தவர் துஞ்சத்து எழுத்தச்சன் என்னும் பெரியாராவர். இவரது இராமாயணம் 'அத்யாத்ம இராமாயணம்' என்ற பெயரில் அறியப்படுகிறது. இந்நூல் சொற்சுவையும் பொருட்சுவையும் நிறைந்து முத்திக்கு வழி காட்டும் ஞானநூலாய் துலங்குகிறது.

அத்யாத்ம இராமாயணத்தை இயற்றிய துஞ்சத்து எழுத்தச்சன் கேரள மாநிலம் மலப்புரம் மாவட்டத்தைச் சேர்ந்த திருருக்கு அருகேயுள்ள ஒரு குக்கிராமத்தில் பிறந்தார். அவ்விடம் இந்நாளில் துஞ்சன் பரம்பு என்று அழைக்கப்படுகிறது. இவரது காலம் பற்றித் தெளிவாக உணர முடியவில்லை. இவர் 16ம் நூற்றுண்டினர் என்று சிலரும், 14, 15வது நூற்றுண்டினர் என்று வேறு சிலரும் கூறுகின்றனர்.

இப்பெரியாரது வாழ்க்கையைக் குறித்து நமக்கு அதிகமான தகவல்கள் ஒன்றும் கிடைக்கவில்லை. இவரது இயற்பெயர் சங்கரன் என்றும் சூரியநாராயணன், இராமன், இராமனுஜன் என்றும் பல்வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன.

இவர் இளமையில் மலையாள மொழியையும், வடமொழியையும் பயின்று பெரும்புலமைப் பெற்றுர். பின்னுளில் தமிழ்மொழி பயின்று தமிழ் இலக்கியங்கள் அனைத்தையும் கசடறக் கற்றுர். பின்னர் வேதாந்தம், உபநிடதம். சோதிடம், தர்க்கம் வியாகரணம் போன்றவைகளையும் ஐயந்திரிபறக் கற்றுணர்ந்தார்.

இவர் எழுதிய வேறு நூல்களாக உத்தர இராமாயணம், மகாபாரதம், தேவி மகாத்மியம், ஹரிநாம கீர்த்தனம், சிந்தாரத்னம், கைவல்ய நவநீதம், கேரள நாடகம் போன்றவை கருதப்படுகின்றன. மேலும் அஷ்டாங்க ஹ்ருதயம் என்ற வடமொழி நூலுக்கு இவர் வியாக்கியானம் எழுதிஞரென்றும் கருதப்படுகிறது. மேற்சொன்ன நூல்கள் கேரள மக்களின் அன்ருட பாராயண நூல்களாகவும் திகழ்கின்றன.

அத்யாத்ம இராமாயணம் கிளிப்பாட்டு என்ற புதிய யாப்பில் இயற்றப்பட்டதாகும். மலையாளத்தில் இந்த யாப்பு முறையில் நூலெழுதிய முதற்கவிஞர் துஞ்சத்து எழுத்தச்சனே ஆவார் (கிளிப்பாட்டு என்பது தாயுமானவரது பராபரக் கண்ணியைப் போன்ற ஒருவகை யாப்பாகும்).

எழுத்தச்சன் இராமாயண காவியத்தை மலையாளத்தில் எழுதியது இலக்கியத் தொண்டு மட்டுமன்று, ஆத்ம ஞானத்தையும், மோட்சத்தையும் மக்கள் உணரவேண்டும், அடைய வேண்டும் என்ற உயரிய நோக்கமேயாகும். அவரைப் பொறுத்தவரையில் இலக்கியம் என்பது அத்யாத்மிகத்தைப் பிறருக்கு உணர்த்துவதேயாகும்.

வடமொழியைக் கலந்து எழுதுவதுதான் இலக்கியத்திற்குப் பெருமை தரும் என்று எல்லோரும் கருதியிருந்த ஒரு காலத்தில் பொருட்சுவை ததும்ப எளிய மலையாளமொழியில் இந்நூலை எழுதி மலையாளக் கவிதையுலகில் ஒரு மாபெரும் புரட்சிக்கு வித்திட்ட பெருமை இவரையே சாரும். இவரை மலையாள இலக்கியத்தின் ஆதிகவி என்று மலையாளக் கவிவாணர்கள் போற்றுகிறுர்கள். இவரைக் கேரளக் கம்பன் என்று பன்மொழியறிஞர்கள் பாராட்டுகிறுர்கள்.

இராமகாதையை மக்களுக்கு எடுத்துச் சொல்வது மட்டுமல்ல அவரது குறிக்கோள். அத்துடன் வாழ்வியல் தத்துவங்களையும் கலந்து எழுதியதனுல் அவரது நூலின் பெருமை பன்மடங்கு அதிகரித்தது. அவனவன் தினந்தினம் செய்யும் செயல்களின் பலனை அவனவனே அநுபவிக்க வேண்டும். பாபம் என்னும் மரத்தின் விதை கோபமாகும். மேன்மக்களை பகைத்தல் தீமை பயக்கும். காலத்தைப் பொன்னுகக் கருதாதவனுக்குக் கல்வியும், கடவுள் நினைப்பில்லாதவனுக்கு முக்தியும் கிட்டாப்பொருள்களே. ஒருவன் செய்த உதவியை மறந்தவன், உயிருடன் இருந்தாலும் பிணமே. இப்படிப் பல அரிய கருத்துக்களின் பெட்டகமாக அவரது நூல் விளங்குகிறது.

இந்நூலில் 'இலட்சுமணேபதேசம்' 'ஜடாயு ஸ்துதி' முதலிய பகுதிகள் வேதாந்தக் கருத்துக்களின் பிழிவாக விளங்கி நித்திய பாராயணத்திற்கு உகந்தவையாகவும் இருக்கின்றன. அத்துடன் இராமநாமத்தின் பெருமையையும் இந்நூல் வெகுவாகப் புகழ்கிறது.இராமஜபம் இருதய சுத்தியை அளித்து மக்களை மோட்சப் பிராப்திக்கு தகுதியுடையவர்களாக்குகிறது என்றும் இந்நூல் கூறுகிறது.

எழுத்தச்சன் தன்னுடைய இறுதிக் காலத்தில் பாலக்காட்டையடுத்த சிற்றூர் என்ற இடத்தில் வாழ்ந்தாரென்றும் அங்கு இராமர் கோவிலைக் கட்டி அங்கொரு மடம் ஸ்தாபித்

(11-ம் பக்கம் பார்க்க)

# ஆழ்வாரின் அனன்ய பக்தி

கடவுளினிடம் பக்தி பூண்டு வழி படுதல் நமது பழநெறி. அதை விட்டுச் சிறிது விலகிப் புதிது புதிதான தெய்வங்களைப் பற்றிக்கொள்ள மனம் நாடும். அதில் என்ன கண்டு விட்டோம்? இதைச் சற்றுப் பார்ப்போமே என்றெல்லாம் உள்ளம் பேதலிக்கும் சந்தர்ப்பங்கள் வரும். அது போழ்து, உறுதியாக நம் வழி வழி வந்த பழைய, உரிய தெய்வத்தை விட்டகலாது நிற்க நமக்கு மன உரம் வேண்டும். இதற்குத் தான் அனன்ய பக்தி என்று பெயர். காற்று அடிக்கிற திக்கெல்லாம் ஓடாமல், பற்றுக் கோடாகப் பழந் தெய்வத்தைப் பற்றி நிற்றல் வேண்டும்.

இதைக் கண்ணபெருமான் நமக்குக் கீதையிலும் சொல்வார். பிரசித்தமான சுலோகம்: 'அனன்யாஸ் சிந்தயந்தோ மாம் யே ஜநா: பர்யுபாஸதே, தேஷாம் நித்யாபியுக்தாநாம் யோக க்ஷேமம் வஹாம்யஹம்' (9, 22). இதில் "வேறு எவரையும் எண்ணுமல்" (அனன்யா: சிந்தயந்த:) எனப் பரந்தாமனே வரையறுத்துக் கூறுவார். அத்தகைய அடியார்களின் யோக க்ஷேமத்தைக் கண்ணனே கவனித்துக் கொள்வதாக உறுதி மொழி இதில் அடங்கியுள்ளது.

அனன்ய சேதா: என்ற சொற்கள் ஏற்கெனவே 8வது அத்தியாயம், 14ம் சுலோகத்திலும் உள்ளது. வேறு எதிலும் உள்ளம் பறிபோகாத நிலை பேசப்படுகிற இடம் அது. இறைவனுடன் இரண்டறக் கலந்த யோகியரின் நிலை 'நித்ய யுக்தஸ்ய யோகின:' என்ற சொற்களில் உணர்த்தப்படுகிறது.

இன்னும் தாண்டிச் சென்ருல், 13 அத்தியாயம் 10ம் சுலோகம் அனன்ய யோகம் பற்றிப் பேசும். யோகம் என்ருல், ஒன்றியிருத்தல், இணைந்த நிலையாகும். அங்கு அனன்ய யோக நிலையோடு, 'பக்தி அவ்யபி சாரிணீ' என்ற வேகம் மிகுந்த சொற்கள் கண்ண பெருமான் திருவாயினின்று வரும். தூய்மையான பக்தி-கலப்பற்ற பக்தி நிலையை உணர்த்த, வியபசாரம் அற்ற பக்தி என்கிறது கீதை. சற்றுக் காரசாரமான சொல் பிரயோகம் ஆகியுள்ள இடம் இது. நமக்கும் எளிதில் புரியலாம். திடீர் திடீரென்று, உள்ள தெய்வத்தை விட்டுவிட்டு எதையாவது பற்றிக் கொள்வது பக்தி அல்ல; வியபசாரம் போன்றது. வழி வழி வந்த தெய்வத்திற்கு அபசாரமும் ஆகும். கற்பு நெறி தவறிய செயல் அது!

கண்ணபெருமான் இவ்வளவு நன்ருகத் தெளிவுபடுத்தியுள்ள அனன்ய பக்தியை நாம் ஆழ்வார் வாக்கிலும் கண்டு தெளியலாம்.

> வாய்அவனை அல்லது வாழ்த்தாது,
> கை உலகம்
> தாயவனை அல்லது தாம் தொழா—
> பேய்முலைநஞ்(சு)
> ஊணுக உண்டான் உருவொடு பேர்
> அல்லால்
> காணுகண் கேளா செவி.
>
> (முதல் திருவந்தாதி-11)

பொய்கையார் வாக்கு இது.

ஆழ்வாரின் அங்க அவயவங்கள் அனைத்திற்கும் தெரியும், யாரைத் தொழ வேண்டும் என்று. வாய் அவனை விட்டு, வேறு எவரையும் புகழ்ந்து பேசாது. உலகளந்த பெருமானை அல்லால், வேறு யாரையும் கரங்கள் கும்பிடமாட்டா. பூதனை எனும் அரக்கியின் மார்பில் விஷத்தைப் பருகினுன் கண்ணபெருமான். நஞ்சே வயிற்றுக்கு உணவு ஆகியது. அந்த அதிசய புருஷனை மட்டுமே காதுகள் கேட்கும்.

இவ்வளவு உறுதியோடு பொய்கையாழ்வார் திரும்பவும் கூறுவார்:

> தோள் அவனைஅல்லால் தொழா என்
> செவி இரண்டும்
> கேள்அவன தின்மொழியே கேட்
> டிருக்கும்—நா நாளும்
> கோள் நாகணையான் குரை கழலே
> கூறுவதே
> நாணுமை நள்ளேன் நயம்.
>
> (முதல் திருவந்தாதி-63)

தோள்கள் தொழுவது எம்பிரானையே. செவிகளும் அவன் இன்மொழியே ஏற்கும். தினமும் நாவில் அனந்தசயனனின் திருவடிப் பெருமையே பேசப்பெறும். வேறு எவர்க்கும், எதற்கும் ஆழ்வார் இடம் தரமாட்டார். (இது வரை முதல் திருவந்தாதி பார்த்தோம்) இவ்விஷயத்திற்காக நம்மாழ்வார் ஒரு முழுப் பத்தையும் அழகாக அருளிச் செய்துள்ளார். கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பரோ?

இந்த முதல் அடி, சடகோபரின் அழுத்தம் நிறைந்த கேள்வியாகப் பிறக்கிறது. இப்படியே ஒவ்வொரு பாடலிற்கும் ஒரு கேள்வி!

நாட்டில் பிறந்தவர் நாரணற்கு ஆள் அன்றி ஆவரோ?

கேட்பார்கள் கேசவன் கீர்த்தி அல்லால் மற்றும் கேட்பரோ? கண்டும் தெளிந்தும் கற்ருர் கண்ணற்கு ஆள் அன்றி ஆவரோ? மாயம் அறிபவர் மாயவற்கு ஆள் அன்றிஆவரோ?

'களப்பாள் நம்பி'

இராமனையும் நாரணனையும், கேச வனையும் மாயவனையும் விட்டுவிட்டு, யார் யார்க்கோ ஆள் ஆவதா? அடிமைப்படுவதா? கற்ருல், இராமா யணம் கற்க வேண்டும். அண்ட சரா சரத்தையும் தம்மோடு வைகுந்தம் அழைத்துச் சென்ற பெருமகன் அல்லவா இராமபிரான்? இப்படி ஒவ்வொரு பாடலிலும் காரணமும் சொல்வது இப்பத்து! திருவாய் மொழியில் வருவது இது.

அடுத்துப் பெரிய திருமொழி! திருமங்கை மன்னனின் பேச்சிலும் அசைக்க முடியாத உறுதி தொனிக்கிறது. மற்ருேர் தெய்வம் எண்ணேன் என்று ஈசனையே விளித்துப் பகர்வார்.

மற்ருேர் தெய்வம் எண்ணேன்
உன்னை என் மனத்து வைத்துப்
பெற்றேன், பெற்றதுவும்
பிறவாமை எம்பெருமான்
வற்ரு நீள் கடல்சூழ்
இலங்கை இராவணனைச்
செற்ருய், கொற்றவனே
திருவிண்ணகரானே.

ஆம், இப்பாசுரம் திருவிண்ணகர் ஒப்பிலியப்பன் சந்நிதியில் பாடியது.

பரமனை மனத்தில் பதிய வைத்து ஆழ்வார் பெற்ருர். எதை யாரை? என்ற கேள்விக்குப் பதில் இல்லை. 'உன்னை' என்ற செயப்படு பொருள் வைத்துப் பெற்றதற்குப் பொது. உடன் பிறவாமையும் கிட்டியது. வற்ருத பெருங்கடல் சூழ்ந்த இலங்கைக்குச் சென்று இராவணனை அழித்த எம்பெருமானே, உன்னையன்றி வேறு தெய்வத்திற்கு மனத்தில் இடம் கொடேன்!

இப்படித்தான் தொண்டரடிப் பொடியாழ்வாரும், இலங்கையை வென்ற தேவனே தேவன் ஆவான் எனப் பாடுவார். திருமாலை என்ற பிரபந்தத்தில் 7ம் பாசுரம். (இந்தப் பிரபந்தத்தில்தான் இரண்டாம் பாசுரம் 'பச்சை மாமலை போல் மேனி').

...சத்தியம் காண்மின் ஐயா
சிலையினுல் இலங்கை செற்ற
தேவனே தேவன் ஆவான்.

இந்த ஆழ்வாரும் சற்று அழுத்தமாகவே பாடுவார்.

மற்றுமோர் தெய்வம் உண்டே
மதியிலா மானிடங்காள்...
அவன் அல்லால் தெய்வம் இல்லை.
கற்றினம் மேய்த்த எந்தை
கழல் இணை பணிமின்ரே! (பாசு. 9)

இதுவும் திருமாலைப் பாசுரமே. கண்ணன் கழல் இணை பணியுங்கள் என்ற கூறவேண்டியவர், எவ்வளவு அழுத்தமாகச் சாடுகிருர் பிற தெய்வ வந்தனையை!

தாவி அன்றுலகம் எல்லாம்
தலைவிளாக் கொண்ட எந்தாய்
சேவியேன் உன்னை அல்லால்
சிக்கெனச் செங்கண் மாலே
ஆவியே அமுதே என்தன்
ஆருயிர் அனைய எந்தாய்
பாவியேன் உன்னை அல்லால்
பாவியேன் பாவியேனே.

(திருமாலை-35)

ஆதிநாளில் உலகை அளந்த எந்தையே, உன்னை அல்லால் வேறு எவரையும் விரைவாக வணங்க முற்படேன். வேறு எவரையும் மனதில் சிந்திக்க மாட்டேன். சிந்திக்க மாட்டவே மாட்டேன்.

ஆண்டாளும் கூறிவிட்டாள்-

இம்மைக்கும் ஏழ்ஏழ் பிறவிக்கும் பற்ருவான்.

நம்மை உடையவன் நாராயணன் நம்பி. (வாரணமாயிரம் 8) இங்கு ஆண்டாள் பேச்சில் இன்னும் ஓர் அழகு! பிறவிகள் இன்னும் அவளுக்கு உண்டு என்று ஏற்றுக் கொள்கிருள். பிறவித் தளையினின்று தப்பி விட்டதாக அவள் பாடவில்லை. ஆனுல், ஏழேழ் பிறவிகளுக்கும் நாராயணனின் தொடர்பு மட்டும் இருந்து கொண்டே இருக்க வேண்டும் என்பது அவள் வாக்கு.நாராயணனே என்றும் இருக்கப் போகிறவன், சநாதனன். அவன் இருக்கிறவரையில் நாமும் அவன் தொடர்பு அருமல் இருப்போமே? என்ன குறைந்து போய் விடப் போகிறது!

திருப்பாவையிலும் 'சிற்றஞ்சிறு காலே' என்ற பாசுரம் இவ்வாறே சொல்லும்.

எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன்தன்னேடு(டு)
உற்ருேமே ஆவோம் உனக்கே நாம்
ஆட்செய்வோம்.

எவ்வளவு பிறவிகள் எடுத்தாலும், கூட நாராயணன் இருக்க வேண்டும். அவனுக்கே நாம் அடி பணிந்து அடிமையாக இருப்போம்.

பிறவி அடுத்தடுத்துத் தொடர்கிற பயம் ஆண்டாளுக்கில்லை. நாராயணனேடு நாமும் இருந்து கொண்டே இருப்போம் என்பதில் அவளுக்கு மகிழ்ச்சி.

கலப்பு அற்ற, கற்பு நிறைந்த பக்தி—இது தான் அனன்ய பக்தி—இது இருந்தால், ஆழ்வார் போல் ஆனந்தமாக வாழலாம். கண்ணன் கூறும் யோகியர் நிலையும் ஆழ்வார் நிலையும் ஒன்றே!

---

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

தார் என்றும் கூறப்படுகிறது. பின்னர் ஒரு மார்கழி மாதத்தில் உத்திர நட்சத்திரத்தில் சோதியில் கலந்தார் என்றும் சொல்லப்படுகிறது.

ஆண்டுதோறும் அவர் நிறுவிய சிற்றூர் மடத்திலும், அவர் பிறந்த இடமான துஞ்சன் பரம்பிலும், சரஸ்வதி பூஜையன்று ஆயிரக்கணக்கான குழந்தைகளுக்கு வித்தியாரம்பம் செய்யப்படுகிறது.

எழுத்தச்சனின் இராமாயணம் இந்தியப் பண்பாட்டுக் களஞ்சியமாகவும், வாழ்க்கைக்கு வழிகாட்டும் ஒளியாகவும் திகழ்கிறது. உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் உவமைகளும், பக்திரசம் சொட்டும் பாக்களும் நிறைந்து படிப்போர்க்குச் சொல்லொணு இன்பத்தை அள்ளியள்ளித் தருவது இந்நூலின் தனிச் சிறப்பு. படித்தவனும், பாமரனும் ஒருபோல உணர்ந்து, உய்வுறும் வண்ணம் கவின்மிகு மலையாள மொழியில் இராமாவதாரத்தின் பெருமையை எடுத்தியம்புவதால் அம்மொழியின் தலைமணி நூலாக இந்நூல் கருதப்படுகிறது.

*

# தெரிந்தும் தெரியாதன....

திரு. ஏ. சுந்தரராஜன்
சென்னை

**அந்தாதி :**

தொண்ணூற்றாறு வகைச் சின்னூல்களில் ஒன்று. நூலின் ஒவ்வொரு பாடலிலும் உள்ள இறுதி எழுத்து, அசை, சொல், சீர், அடி இவற்றுள் ஒன்று அதற்கடுத்த பாடலின் முதலாக வரும்படி அமைத்துப் பாடி, இறுதிப் பாடலின் இறுதியும் முதற் பாடலின் முதலும் ஒன்றாக இணையும்படி மண்டலித்து, மாலை போல தொடுத்து முடிப்பது 'அந்தாதி' எனப்படும். நம்மாழ்வாரின் திருவாய்மொழி இவ்வாறு அந்தத்தை ஆதியாகக் கொண்ட அந்தாதி வகையாகும்.

**அவிட்டம் :**

சிரவிஷ்டா அல்லது தனிஷ்டை என்று குறிப்பிடப்படும் 23வது நட்சத்திர மண்டலம்.

**அவித்தை :**

அறியாமை. உலக அவித்தை—மூல அவித்தை என இருவகையாகக் கூறுவர். உலகப் பொருள்களை உள்ளபடி அறியாமல் இருத்தல் உலக அவித்தை. மூல அவித்தை ஜீவன் தனது உண்மையைஅறியாமல் உடல்-புலன் - புத்தி இவற்றையே தான் என்று அபிமானம் கொண்டும் வெளியுலகப் பற்றுடன் தன் வாழ்க்கையை நடத்துவது.

அவித்தையானது பொருளை மறைத்து வேறு விதமாக தோன்றச் செய்கிறது. மறைப்பை ஆவரணம் என்றும் மெய்த்தோற்றத்தை விட்சேபம் என்றும் கூறுவர். உண்மைப் பொருளை "இல்லை" என்னும் எண்ணத்தை உண்டுபண்ணுகிற ஆவரணத்தை அசத்வாபாதக ஆவரணம் என்றும், "விளங்கவில்லை" என்னும் எண்ணத்தை உண்டு பண்ணுகிற ஆவரணத்தை அபானுபாதக ஆவரணம் என்றும் குறிப்பிடுவர்.

ஜீவன் தன் ஆத்ம சொரூபம் அறியாமல் 'சரீரம்-நான்' என்று கருதித் துன்பங்களை அனுபவிக்கிறான். குரு உபதேசத்தினால், தன் ஆத்ம சொரூப கருத்தை உணர்ந்த மாத்திரத்திலே அசத்வாபாதக ஆவரணம் விலகுகிறது. தன்னிலையைத் தானே "ஆத்ம சாட்சாத்காரணம்" பெற்று உணரும் பொழுது அபானுபாதக ஆவரணம் விலகுகிறது.

அவித்தை உண்மைப் பொருளன்று. எப்படி பொருள்களை மறைக்கும் இருள் உண்மைப் பொருளில்லையோ, அவ்விதமே ஆத்ம வஸ்துவை மறைக்கும் அவித்தையும் உண்மைப் பொருளன்று. கருமமாகிய புண்ணிய பாவங்களே அவித்தை. பிரம்ம ஞானத்தால், கருமங்கள் நாசமடையும். ஒளியால் இருள் விலகுவது போல் புத்தியில் உண்டாகும் ஆத்மாகாரமான ஞானத்தால் அவித்தை விலகும்.

**அவதாரம் :**

உயர்நிலையிலிருந்து தாழ்நிலைக்கு இறங்குதலை அவதாரம் என்பர். உயிர்கள் உய்வதற்காகக்கடைபிடிக்க வேண்டிய அறநெறியில் நடந்து காட்டும் பொருட்டுப் பல உயிர்களாக இறைவன் பிறப்பதே அவதாரம்.

உலகத்திலே எவ்வெப்பொழுது அறம் தேய்ந்து அல்லவை பெருகுகின்றனவோ, அவ்வப்பொழுதெல்லாம் இறையவர் தம்மைத் தாமே தம் மாயையிலே புகுத்தி, மானிடசட்டை தாங்கி வெளிப்படுகிறார் என்று கீதை கூறுகிறது.

நாராயணனின் பத்து அவதாரங்களும் பரிணாமத்தின் முக்கிய படிகளை உணர்த்துகின்றன எனவும் கூறுவர். மனித இயற்கையினும் தாழ்ந்த விலங்குத் தன்மை நிலை மீன், ஆமை பன்றி என்னும் அவதாரங்களிலே குறிப்பிடப்படுகின்றது. பின்னர் விலங்குலகு மனிதவுலகுக்கு மாறுவதை நரசிம்மாவதாரம் காட்டுகிறது. வாமனாவதாரம் மனித இயற்கை முழுவளர்ச்சியடையாமையைக் குறிக்கிறது. மனிதனுடைய முதல்நிலை பழிவாங்கும் சூழ்நிலை என்பதனை பரசுராமாவதாரம் அறிவிக்கிறது. நற்குணத்தின் தூயநிலையை இராமாவதாரம் தெளிவுபடுத்துகிறது. தீயசக்திகளைச் சுயநலமின்றிப் போராடி வெல்வதனைக் கிருஷ்ணாவதாரமும்—கல்கி அவதாரமும் குறிப்பிடுகின்றன.

அவதாரமே தெய்வத் தன்மை உலகில் இருப்பதற்கு நேரடியான சான்றாக இருக்கிறது. தெய்வம் மனிதனாக இறங்க இயலுமாதலின், மனிதனும் தெய்வ நிலைக்கு உயர இயலும் என்பது பெறப்படுகிறது.

**அரக்கர் :**

இவர்கள் இராட்சதர் என்றும் கூறப்படுபவர். பதினெண் கணங்களில் ஒரு வகையினர். அசுரரின் வேறானவர். புலத்தியர் மரபினர் என்று ஒரு சாரரும்; காசிபர் மைந்தன் ரட்சஸ் என்பவருடைய மரபினர் என்று விஷ்ணு புராணத்தாரும்; பிரமன் கடல்களைப் படைத்து அவற்றை இரட்சிக்க இவர்களைப் படைத்தார் என்று வான்மீகியும் கூறுவர். இவர்கள் முனிவர்களுக்குத் துன்பமுண்டாக்கியும் வேள்விகளை அழித்தும் வந்தனர் என்று புராணங்கள் கூறுகின்றன. ★

# உண்ணும்போது ஒரு கைப்பிடி

அலுவலகத்தில் காலை நேரத்து வேலை முடிந்து உணவு உண்பதற்காக வீட்டுக்கு வருகிறார் குடும்பத் தலைவர். பள்ளிக்குச் சென்ற குழந்தைகளும் நண்பகல் உணவுக்காக வீடு வந்து சேர்ந்தனர். இல்லத் தலைவி எல்லோருக்கும் உணவு பரிமாறுகிறாள். அனைவரும் உண்ணத் தொடங்குகிறார்கள்.

அப்போது வீட்டின் வெளி வாயிலிலிருந்து ஒரு குரல் கேட்கிறது. "அம்மா! தாயே! மகாலட்சுமி! சாப்பிட்டு இரண்டு நாளாயிற்று. கொஞ்சம் சாப்பாடு போடுங்கள் தாயே!" என்று அந்தக் குரம் கெஞ்சுகிறது.

வீட்டுத் தலைவி உடனே எழுவதற்கு முயற்சி செய்கிறாள். அப்போது அங்கிருந்த அவர்களது இளைய குழந்தை மழலை பேசுகிறது. 'அம்மா! நான் போய்ச் சொல்லிட்டு வரேம்மா!"

தாய் கேட்கிறாள், "என்ன என்று சொல்லுவாய்?". குழந்தை சிரித்தபடி சொல்லுகிறது: "பிறகு வா பார்க்கலாம்' அப்படீன்னு சொல்லிட்டு வருவேம்மா."

தாய் அதிர்ச்சி அடைகிறாள். "யாரப்பா உனக்கு அப்படிச் சொல்லிக் கொடுத்தது?" என்று கடிந்து கொள்கிறாள். "சில பேர் அப்படித் தாம்மா சொல்றாங்க!" என்று குழந்தை பதில் கூறுகிறது. "அப்படியெல்லாம் சொல்லக் கூடாது"என்று கண்டித்துவிட்டு, அந்தத் தாய் பிச்சைக்காரனுக்குச் சிறிது உணவு வழங்கி விட்டு வருகிறாள்.

அவள் தன் குழந்தைகளைப் பார்த்து, "கலப்பை பூட்டி ஏர் உழுவோர் பலர். நாற்று நடுவோர் பலர்; களை பறிப்போர் பலர். எருவிட்டு நீர்ப் பாய்ச்சிக் காவல் காத்து அறுவடை செய்வோர் பலர். இப்படிப் பலரும் உழைத்துச் சேர்த்த தானியம், பணம் கொடுத்து வாங்குவதால் மட்டுமே நமக்குச் சொந்தம் என்று நினைத்துவிடக் கூடாது. பலரும் உழைத்ததால் வந்த பொருளில் ஏழைகளுக்கும் உரிமையுண்டு. பணம் கொடுத்து வாங்க முடியாததால், அவர்கள் வீடுதோறும் வந்து யாசிக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களுக்குச் சிறிதளவு உணவையாவது பகிர்ந்து அளித்து, அவர்களது பசியைப் போக்க முயற்சிப்பதுதான் நியாயம். அதுதான் அறம்" என்று புத்திமதி கூறினாள்.

அந்தத் தாய் சொன்ன தத்துவத்தைக் கேட்டு என் உடல் சிலிர்த்தது. நண்பர் ஒருவரின் வீட்டில் நடந்த இந்த நிகழ்ச்சியை நான் அடிக்கடி நினைத்துப் பார்க்கிறேன். 'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புக; இதுவே தலையாய அறம்' என்று வள்ளுவர் சொன்ன திருக்குறளுக்குப் பதவுரை - கருத்துரை - தெளிவுரை ஆகியவற்றைப் பலமுறை படித்தும் வள்ளுவரின் உள்ளத்தை முழுமையாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் நண்பரின் மனைவி மிகச் சுலபமாக அந்த உள்ளத்தை நமக்குப் புரிய வைத்து விட்டாள். 'பலருடைய உழைப்பால் கிடைப்பது உணவு. அதனால் அதில் ஏழைகளுக்கும் உரிமை இருக்கிறது. ஆகவே அதனைப் பகிர்ந்து கொடுப்பதுதான் நியாயம். பலருக்கும் பொதுவான நியாயமே அறமாகும்' என்று சொன்ன அந்தத் தாயின் மொழிகள் வள்ளுவர் குறளுக்கு மிகச் சிறந்த விளக்கமாக அமைகின்றன.

உணவு, உடை, இருப்பிடம் இவைகளுக்காகத்தான் மனிதன் ஓடியாடி உழைக்கிறான். வசதியான வீடு வேண்டும். அழகான உடை வேண்டும். வயிறார உணவு வேண்டும். இப்படித்தான் ஒவ்வொரு மனிதனும் ஆசைப்படுகிறான். இவைகளுக்காகத் இடைவிடாது உழைக்கிறான்.

நாம் ஆறறிவு படைத்தவர்கள். நாகரிகம் உடையவர்கள். மானம் காக்க உடை அணிகிறோம். மழை - வெயில் - திருட்டு போன்ற தீமைகளிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ள நமக்கு இருப்பிடம் வேண்டியிருக்கிறது. உடை, இருப்பிடம் ஆகிய இவைகளில் குறைவு ஏற்பட்டாலும் நாம் வாழ்ந்துவிட முடியும். ஆனால் உணவில்லாமல் எவ்வளவு காலம் உயிர் வாழ முடியும்?

ஏழைகளுக்குத் தங்குவதற்கு வீடு இல்லை; போகட்டும். உடுத்துவதற்கு நல்ல உடைகூட அவர்களுக்கு இல்லை;

**புலவர் பெ. கிருஷ்ணராஜன்**, எம் ஏ.
சேலம்-6.

அதுவும் போகட்டும். ஆனால் ஒரு வேளை உண்பதற்குக் கூட உணவு இல்லாமல் பட்டினி கிடந்து, ஒட்டிய வயிறும் குழிவிழுந்த கண்களுமாய்க் காட்சி தருகிறார்களே! வறுமை காரணமாக அவர்கள் சாகத்தான் வேண்டுமா?

இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமுன் இதனை நினைத்துப் பார்த்தார் நக்கீரர் என்னும் தமிழ்ப் புலவர். 'செல்வந்தர்கள் ஏழைகளுக்குக் கொடுத்து உதவ வேண்டும். இது நமது பொருள் தானே! நாமேதான் அனுபவிப்போம். யாருக்கும் உதவி செய்ய மாட்டோம் என்று இருந்தால், அந்தப் பொருள் அவர்களுக்குப் பயன்படாமல் பல வழிகளில் அவர்களிடமிருந்து நீங்கி

விடும்' என்று சொல்லுகிறார் அவர். அப்படிச் சொல்லும் அவர் செல் வத்துப் பயனே ஈதல் என்று, செல்வம் பெற்றதன் பயன் அறம் செய்தலே என்று பணக்காரர்களுக்கு நல்வழி காட்டுகிறார்.

பசித்த ஏழைகள் பலர் உணவுக் காக அலைகின்றனர். பல்லெலாம் தெரியக் காட்டி - பருவரல் முகத்தில் கூட்டி - சொல்லெலாம் சொல்லி நாட்டி - துணைக்கரம் விரித்து நீட்டி- இல்லெலாம் திரிந்து, 'அம்மா! தாயே! பிச்சை போடுங்கள்' என்று சோறு கேட்பதைப் பார்க்கும்போது பரி தாபமாக இருக்கிறது.

வீட்டின் வாயிற்புறத்திலே நின்று 'ஏதாவது கொடுங்கள்' என்று யாசிப் பது மிகவும் கேவலம்தான். ஆனால் தனது மானத்தைவிட்டு அப்படிக் கேட்டானே, அவனுக்கு எதுவும் தரா மல் விரட்டுவது அதைவிடக் கேவலம் அல்லவா என்று கேட்கிறார் ஒரு சான் றோர்.

ஈயென இரத்தல் இழிந்தன்று,
அதனெதிர்
ஈயேன் என்றல் அதனினும் இழிந்
தன்று

என்று கூறுகிறார் அவர். கொடு; உன்னால் முடிந்ததைக் கொடு; பிறர் பசியைப் போக்கச் சிறிதளவாவது கொடு. இல்லையென்று மட்டும் சொல்லி விடாதே. தன்னிடம் இல்லை யென்றுதான் பசித்தவன் உன்னிடம் வந்து கேட்கிறான். நீயும் 'என்னிடம் எதுவும் இல்லை' என்று சொல்லிவிட் டால், அந்த ஏழைக்கும் உனக்கும் வேறுபாடில்லாமல் போய்விடும். ஆகவே உன்னை நாடி வந்தவர்களுக்கு இல்லையென்று சொல்லாமல் கொடு- என்று நையாண்டி செய்து அறத்தை வற்புறுத்துகிறார் புறநானூற்றுப் புலவர்.

வீட்டுக்கு வீடு சென்று பிச்சை கேட்டும் உணவு கிடைக்காத வறிய வரைப் பார்த்து மனம் நொந்த வட லூர் வள்ளற் பெருமான்,

வீடுதோறும் இரந்தும் பசியறாது
அயர்ந்த
வெற்றரைக் கண்டுஉளம் பதைத்தேன்

என்று நெஞ்சு பதைக்கிறார். பசியால் வருந்தி வந்தவர், சோறு வடித்த பழைய கஞ்சியாவது கிடைக்குமா என்று கெஞ்சுகிறார். அதைக்கூடத் தரவில்லையாம் சிலர். வாடிய பயி ரைக் கண்ட போதெல்லாம் வாடிய அந்த வள்ளலின் உள்ளத்தில் வருத் தம் மிகுகிறது.

பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் நேரீர்
பழங்கஞ்சி ஆயினும் வழங்கவும்
நினையீர்
எட்டிபோல வாழ்கின்றீர்

என அந்த உலோபிகளைச் சாடுகிறது அத்திருவுள்ளம்.

பசியைப்போலக் கொடுமையானது உலகில் வேறு எதுவுமில்லை. மணி மேகலை என்னும் தமிழ்க் காப்பியம், பல தீமைகளுக்கும் குற்றங்களுக்கும் ஆளாக்கும் பாவி பசியே என்று குற்றம் சாட்டுகிறது.

குடிப்பிறப்பு அழிக்கும், விழுப்பம்
கொல்லும்,
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்,
நாண்அணி களையும், மாண்எழில்
சிதைக்கும்,
பூண்முலை மாதரொடு புறங்கடை
நிறுத்தும்
பசிப்பிணி என்னும் பாவி.

'உயர்குடிப் பிறப்பு - பெருமை - கல்வி-நாணம்-அழகு ஆகிய இவற்றை அழித்து, மனைவி மக்களோடு தெருத் தெருவாக அலையச் செய்வது பசி' என்று பசியின் கொடுமைகளை இந் நூல் பட்டியல் போட்டுக் காட்டு கிறது.

பசிக்கொடுமையை ஒழிப்பவர்களே சமுதாயத்தில் உயர்ந்தவர்கள் என்று


உ
ஓம் சப்த விக்னேஸ்வராய நம:
ஓம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்
"வேதோ நித்யம் அதீயதாம்"
"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்"

ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் அம்மா ஓம் காமாக்ஷி நம:
ஓம் சந்திரசேகரேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம:
ஓம் ஜயேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம:

இந்தக்கட்டத்தில் உள்ளதை 108 தடவை எழுதி (யாரும் எந்த மொழியிலும் எப்பொழுதும் எழுதலாம்.) அத்துடன் கூட ரூ.5/- (ரூபாய் ஐந்து மட்டும்) மணியார்டர் மூலம் கீழ்க்கண்ட முகவரியில் சமர்ப்பிக்கவும்.
"வேத ஒளி" படமும், புனித பிரசாதமும் அனுப்பப்படும்.
எல்லாம் நன்மைக்கே. எல்லாம் நல்லதே நடக்கும்.
அனுப்ப வேண்டிய முகவரி :
**B. R. மகாலிங்கம்,**
D-16-A, உ. வே. சாமிநாத அய்யர் சாலை, பிளாக்-27, நெய்வேலி-607 803. தமிழ்நாடு.

சித்தலைச் சாத்தனர் மதிப்பிடுகிருர். உணவைக் கொடுப்பவர்கள் உயிரைக் காப்பவர்கள் ஆவார்கள் என்பது அவர் கருத்து.

மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கு
எல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்
தோரே

என்று உணவுக்கொடை வழங்குபவர் களைப் பாராட்டுகிருர். காணர், கேளார், கால்முடம்பட்டோர், பேணுநர் இல்லா அநாதைகள், பிணியால் வருந்துவோர் ஆகிய அனைவரையும் அழைத்து, உணவு வழங்கி உயிர் களைக் காத்துப் பேரறம் புரிந்த ஆபுத்திரன் என்பவனைத் தமது காப்பியத்தில் உயர்ந்த இடத்தில் வைத்துப் போற்றுகிருர்.

ஏலாதி என்னும் தமிழ் நூல் யார் யாருக்கு உணவுக் கொடை வழங்க வேண்டும் என்பதையும், அவ்வாறு அறம் செய்தவர் எத்தகைய சிறப் படைவர் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. இல்லிழந்தார், கண் இழந்தார், செல்வம் இழந்தார், நெல் இழந்தார், ஆநிரை தானிழந்தார் ஆகிய இவர்கட்கு உணவு ஈந்தவர், பல் யானை மன்னராய் வாழ்வார் என்பது இந்நூலின் கருத்து.

பிறருக்குக் கொடுக்காமல் தாமே உண்ணுவது பாவம் என்பதை எல்லா நூல்களும் எடுத்துரைக்கின்றன. பிறருக்கு என்றில்லாமல், தமக்காகவே சமைத்து உண்ணும் மனிதர்கள் பாவத்தையே புசிக்கிருர்கள் என்று பகவத் கீதையும் (அத். 3-சுலோகம் 13) கூறுகிறது.

ஒரு சமயம் ஔவையாரைப் பார்த்து ஒருவர் 'உயர்ந்த குலத்தினர் யார்? தாழ்ந்த சாதியினர் யார்?' என்று கேட்டாராம். அப்போது ஔவையார், 'பிறப்பினல் உயர்வு தாழ்வு இல்லையப்பா! பசியினல் வருந்தி யாசித்தவர்களுக்கு யார் உணவு வழங்குகிருர்களோ அவர்கள்தாம் உயர்ந்த குலம்; அப்படி உணவு கொடுக்காதவர்கள் தாழ்ந்த இனம்' என்பதை இட்டார் பெரியோர்; இடாதோர் இழிகுலத்தோர் என்னும் தமது அமுத வாக்கால் வெளிப்படுத்திஞர்.

நாள்தோறும் ஆயிரத்தெட்டு வைணவ அடியார்களுக்கு உணவிட்டு ஆதரித்தவர் திருமங்கை ஆழ்வார். ஒரு சமயம் தம்மை நாடிவந்த அடியவர்களுக்கு அவரால் உணவு வழங்க முடியாமல் போய்விட்டது. அதற்காக அவர் அடைந்த துயரத்திற்கு அளவில்லை. "நாங்கள் உணவு சாப்பிட்டுப் பல நாட்கள் ஆகிவிட்டன. எங்களுக்குச் சிறிது உணவு கொடுங்கள்" என்று கெஞ்சிக் கேட்டவர்களுக்கு, 'என்னிடம் உணவு இல்லை' என்று சொல்லி அவர்களைப் பட்டினி கிடக்கச் செய்த நான் அற்பன்" என்று தம்மைத் தாமே நொந்து கொள்கிருர்.

இடும்பையால் அடர்ப்புண்டு இடுமினே
துற்றென்று
இரந்தவர்க் கில்லையே என்று
நெடுஞ்சொலால் மறுத்த நீசன்

என்பது திருமங்கை ஆழ்வாரின் பெரிய திருமொழி.

அன்னதானத்தின் பெருமையை உணர்ந்தவர்கள் பெண்கள். தங்கள் வீடுகளை நாடிவரும் வறியவர்க்கும், துறவியர்க்கும் முகம் சுளிக்காமல் பெண்கள் உணவை வழங்குகிருர்கள். இதனுல்தான் கவிமணி தேசிக விநாயகம் அவர்கள் **உங்கள் பங்கயக்கை பார்த்தல்லவோ பாரில் அறங்கள் வளருமம்மா** என்று பாடினர். வீட்டுத் தலைவியரால் வளர்க்கப்படும் அன்னதானத்தின் அவசியத்தை, இன்று நாட்டுத் தலைவர்களும் நன்கு உணர்ந்துகொண்டிருக்கிருர்கள். அதனுல்தான் சில மாநில அரசுகள் தங்கள் மாநிலங்களில் பள்ளிக் குழந்தைகளுக்கு இலவச உணவை வழங்கி வருகின்றன.

மனிதர்க்குச் செய்யும் தொண்டே மகேசர்க்குச் செய்யும் தொண்டு என்னும் புரட்சிக் கருத்தைச் சொன்ன சிவயோகி திருமூலர், 'நடமாடும் அன்பர்களுக்கு உணவை வழங்குவது, கொடிகள் அசைந்தாடும் கோபுரங்களையுடைய கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு வழங்கியது போல ஆகும்' என்று மொழிந்த அவர், நாம் உண்ணுகிற நேரத்தில் ஒரு கைப்பிடி உணவையாவது மற்றவர்களுக்குக் கொடுத்து உண்ண வேண்டும் என்று கூறுகிருர்.

யாவர்க்குமாம் உண்ணும்போது
ஒரு கைப்பிடி

என்பது திருமூலரின் திருமந்திரம்.

திருமூலரின் தெய்வ மந்திரத்தை உணர்ந்த வள்ளல் இராமலிங்க அடிகள் சுமார் 120 ஆண்டுகளுக்கு முன்பே வடலூரில் சத்திய தருமச்சாலை அமைத்து, அணையாத அடுப்பை மூட்டி அனைவருக்கும் உணவு வழங்கும் திருப்பணியைத் தொடங்கிஞர். பல அன்பர்களின் உதவியால் அது இன்றும் தொடர்ந்து நடைபெறுகிறது. கர்நாடக மாநிலத்தில் தர்மஸ்தலம் என்னும் திருத்தலத்தில் வருகின்றவர்களுக்கெல்லாம் சலிப்பின்றி இடைவிடாது அன்னதானம் செய்கிருர்கள். திருப்பதி திருமலை தேவஸ்தானமும் திருமலை வேங்கடவனைத் தரிசித்து வரும் அன்பர்களில் பத்தாயிரம் பேருக்கு நாள்தோறும் நண்பகலில் உணவு வழங்கும் உயர்ந்த அறத்தைச் செய்து வருவது பாராட்டுதற்கு உரியதாகும்.



# காக்கும் கருணை



கோ. க. வா. கோவிந்தராஜ பாவனு சார்யா ஸ்வாமி,
ஸ்ரீரங்கம்.

பகவான் சேதனனுக்குத் துன்பங்களைக் கொடுக்கிருன். ஆனுல் துக்க நிவர்த்தியும் அவனுலேதான் ஏற்படுகிறது. இங்கே ஒரு கேள்வி வரும். துக்கத்தைக் கொடுத்து, பிறகு தானே நிவர்த்தி பண்ணுவதற்குப் பதிலாக பகவான் ஏன் துக்கமே கொடுக்காமல் இருக்கக் கூடாது? என்று.

இதற்குப் பதில் :

அவனவனுடைய கர்மாநுகுணமாக பாபத்துக்குத் தகுந்தாற்போல் அவனுக்குத் துக்கத்தைக் கொடுக்க வேண்டிய நிர்பந்தம் இருப்பதால் அதைச் செய்கிருன். பிறகு அவனவனுடைய புண்ணிய பலனுக்குத் தகுந்தாற்போல் அதை அவனே நிவர்த்தி செய்கிருன் என்பது பெரியோர்கள் வியாக்கியானம்.

இதற்கு ஒரு ரஸமான உதாரணம் :

ஞான மனுட்டானமிவை நன்ருகவேயுடையவரானவரும், ஆசார்ய ச்ரேஷ்டருமான சிறியாச்சான் ஒரு ஸமயம் வீதி வழியே எழுந்தருளும் பொழுது, வழியில் ஓர் இடத்தில் ஒரு காக்ஷியைக் கண்டார். அது என்னவென்ருல்,

ஒரு ஸாது ஏதோ ஒரு காரியமாக தன் வீட்டுக் கூரை மேல் ஏறியிருக்கும்பொழுது தவறி கீழே விழுந்து விட்டார். "ஒருவன் தெருவில் விழுந்து காயமுற்று இரத்தம் சிந்தும்போது அதைப் பார்ப்பவனும் இரத்தம் பெருகக் காயமடைந்திருப்பதாய் உணர்ந்தால்தான் அவன் ஸ்ரீ வைஷ்ணவன். காயமுற்றவன் வேருெருவன் என்ற உணர்ச்சி ஏற்பட்டால் அவன் ஸ்ரீவைஷ்ணவன் இல்லை", என்ற நஞ்சீயர் வாக்குப்படி, சிறியாச்சான் ஓடி அவருக்கு சிகித்சை செய்யப்போனபோது, அந்த ஸாது விழுந்த இடத்திலேயே சிறிது நேரம் உட்கார்ந்திருந்து விட்டு, சிறியாச்சானை சாஷ்டாங்கமாக தண்டன் சமர்ப்பித்து, "ஆச்சான்! பகவான் என்னைத் தள்ளி விட்டார் பார்த்திரா" என்ருர். அதற்கு ஆச்சான் சங்கோசத்துடன் 'ஸ்வாமி தேவரீர் என்னை நமஸ்கரிக்கலாமா? வேண்டாம், வேண்டாம்'என்று பணிவுடன் கூறி, அவரைத் தழுவிக்கொண்டு ஆனந்தத்தோடு "பகவான் தள்ளி விட்டதாக நினைக்காதீர். முன் செய்த தீவினையாலே கீழே விழுந்தோம். ப்ரஹ்லாதனை மலையுச்சியிலிருந்து கீழே தள்ளிவிட்டபோது ஸ்ரீ பூமாதேவி அவனைத் தாங்கி புஷ்பப் படுக்கையில் விழுந்தாற் போல் செய்தது போல, பகவான் தம் கருணையினுலே பூமியில் இருந்து தாங்கி கை, கால் முறியாதபடி எழுந்திருக்கச் செய்து காப்பாற்றினுர் என்று நினைத்திரும்". என்று அருளி, ஸாதுவை மிகவும் கொண்டாடி சந்தோஷப்பட்டார் என்பது வரலாறு.

இதிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய தத்துவம் என்னவென்ருல், சுகம், துக்கம் எது ஏற்பட்டாலும் இது பகவானுடைய ஸங்கல்ப்பம்; துன்பம் கொடுக்கும் பகவானே கண்டிப்பாய் காப்பாற்றவும் செய்வான் என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு வாழ வேண்டும்.

உறங்குகிறபோது விஷ ஜந்துக்கள் நம்மைத் தீண்டாமலும், இடி முதலானவை தலையில் விழாமலும் நம்மை ரக்ஷிப்பான் என்று நினைத்து, உறங்குகிறபோது கவலையற்று உறங்குவது போலே விழித்திருக்கும் போதும் 'நமக்கு ரக்ஷகர் யார்' என்னும் கவலையில்லாமல் வாழ வேண்டும். இதுவே நமது தர்சனத்தின் ஸாரமான ரஹஸ்யம் என்பது முதலியாண்டானது குமாரரான கந்தாடையாண்டானின் வார்த்தை.

*

**ஓம் சப்த விக்னேஸ்வராய நம:**
**ஓம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம்**

எல்லாம் நன்மைக்கே! எல்லாம் நல்லதே நடக்கும்! என்று அசையாத நம்பிக்கையுடன் இந்த புனித ஸ்லோகம் எழுதி, 'ஓம் வேத ஒளி' படமும், புனித பிரசாதமும் பெறுங்கள். இதனுல் பலன் அடைந்தவர்களும், பல கஷ்டங்கள் நிவர்த்தியானதும், உத்தியோகம், பதவி உயர்வு கிடைத்ததும், நல்ல இடத்தில் விவாகம் அமைந்ததும், உடம்பு குணமானவர்களும், கல்வி தேர்ச்சி பெற்றவர்களும், வியாபாரம், தொழில் செழிப்படைந்ததும் அனுபவபூர்வமான உண்மைகளாகும்.

"ஓம் வேத ஒளி"

"ஓம் ஸ்ரீ காஞ்சி ஓம் காமகோடி ஓம் தெய்வம்"

**"ஓம் சந்திரசேகரேந்திர ஓம் ஸரஸ்வதி ஓம் ஸ்வாமிகள் நம:"**

FOR EVER அவருடைய பரிபூர்ண அனுக்ரஹத்தாலும், அருள் ஆசியாலும்தான் FOR EVER என்று வேண்டி, விரும்பித் தெரிவித்துக் கொள்கிறேன்.

தங்கள் அன்புள்ள,
**B. R. மகாலிங்கம்**

# ஆனைரிய செல்வன்

திரு. வி. இராகவன்,
பள்ளத்தூர்

சிறந்த ஞான சக்தியுடைய இந்திரன் போன்ருேர் கூப்பிடும் குரலுக்கே குணக்கடலான திருமால் ஓடி வருவன் என்றில்லை. மானிடரைக் காட்டிலும் தாழ்ந்த விலங்கினங்களுக்கும் கூப்பிட்டக் குரலுக்கு நேரில் தோன்றிக் காரியம் புரிவன், இவனிடம் அவைகளுக்கு ஒரு சிறிது விசுவாசம் இருக்குமேயாகில்! ''அவன் உடையவன் நாம் அவன் உடமை என்னும் அநாதியாயிருக்கும் உறவால் அன்புடைய நம்மை அவசியம் காப்பாற்றியே தீருவன் என்று உறுதியாக எண்ணுவதே விஸ்வாஸம் எனப்படுகிறது''. ''தொடரெடுத்தமால் யானை'' (2-ம் திருவந்தாதி 13) என்றவாறு இரும்புச் சங்கிலியால் கால்கள் பிணைக்கப் பெற்றிருப்பினும் யானை அதையும் அறுத்துக் கொண்டு தன் விருப்பப்படி திரியும் தன்மையுடையது; மேலும் மதம் பிடித்ததுபோல் மயங்கிக் கிடப்பதுவும் இயல்பாகவுடையது யானை. அவ்வானையின் இடர்க்களைய ஓடோடியும் வந்தான் திருமால்! புகலற்ற சேதனர்களுக்கு அவனிடம் ஒரு சிறிது அன்பு இருக்குமேயாகில் அவர்களை நாடி ஓடிவரச் செய்யுமே அவனது சீலகுணம்!

இந்த்ரத்யும்னன் என்னும் ஓர் அரசன் விஷ்ணு பக்தனுய்த் திகழ்ந்தான். ''பரிசு நறுமலரால் பாற்கடலான் பாதம் புரிவார்'' (2-ம் திருவந். 3) என பரிமளமிக்க மலர்களாலே ப்ரேமத்தோடு தினமும் எம்பெருமான் திருவடி வந்தனை புரிந்து வந்தான். ''இன மலர்கள் எட்டும் இட்டு'' ''கந்தமா மலரெட்டுமிட்டு'' (பெரிய திருமொழி 1-2-7, 3-5-6) என்றவாறு எம்பெருமான் உகக்கும் கருமுகை, கற்பகம், நாழல், மந்தாரை சௌகந்தி, செங்கழு நீர், தாமரை, தாழை என எட்டு வகையான மணமிக்க பூக்களால் அர்ச்சித்து மகிழ்வுற்ருன்.

திருவெட்டெழுத்திலே உள்ள ஒவ்வோர் எழுத்தும் மணமிக்க மலர் போல், அது அவனுக்கும் இனிமையாக இருக்குமாதலால் அவ்வெட்டு விதமான மலர்களைத் திருவடிகளில் சேர்ப்பிப்பதாய், அவனது நாவினின்றும் உதிர்ந்தது 'திருமந்திரம்'!

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம்
புஷ்பம் இந்த்ரிய நிக்ரஹ:
ஸர்வபூததயா புஷ்பம்
க்ஷமா புஷ்பம் விசேஷத: |
ஜ்ஞானம் புஷ்பம் தப: புஷ்பம்
த்யானம் புஷ்பம் ததைவ ச
ஸத்யம் அஷ்டவித புஷ்பம்
விஷ்ணோ: ப்ரீதிகரம் பவேத் ||

உயிர்களுக்குத் துன்பம் செய்யா திருக்கை முதல் புஷ்பம், இந்த்ரியங்களை அடக்குவது இரண்டாவது புஷ்பம், எல்லா உயிர்களிடத்தும் அருள் உள்ளவனுயிருத்தல் மூன்ருவது புஷ்பம், பொறுமை நான்காவது புஷ்பம், ஞானம் ஐந்தாவது புஷ்பம், தவம் ஆருவது புஷ்பம் அவ்வாறே தியானம் ஏழாவது புஷ்பம், சத்யம் எட்டாவது புஷ்பம். இவ்வாருன எட்டுவிதமான மலர்கள் விஷ்ணுவிற்குப் ப்ரீதியைச் செய்கின்றன என்றவாறு எட்டு வகைப் புஷ்பங்களையுமிட்டுப் 'பரவச நிலை' எய்தினன்.

இந்நிலையில் அகத்திய மாமுனிவர் அவனைக் காண வருகிருர். பரவச நிலையிலிருக்கும் அவன் முனிவர் வந்ததை அறிந்தானில்லை. அதிதியாக வந்த தன்னைத் தகுந்தவாறு உபசரிக்கவில்லையென மிக்க சீற்றம் கொண்டு, 'யானை போல் செருக்குற்றுக் கிடந்த நீ யானையாகக் கடவை' எனச் சாபமிட்டுச் சென்ருர். யானையாகிக் காட்டிலே திரிந்தாலும் ''திருமாலடி தொழும்'' பேற்றினை மறந்தானில்லை. இதனுல் ''கஜேந்திரன்'' என்றழைக்கும் பெருமையையும் பெற்ருன்.

''தாமுளரே தம்முள்ள முள்ளதே தாமரையின் பூவுளதே'' (2-ம் திருவந். 21) என எம்பெருமானுக்கு அவன் உகந்தவடிமை புரியத் தக்க வலிமைமிக்க தேகத்தையும், அவனை நினைந்துருகித் தான் உகந்து செய்யும் வந்தனைக்கு உறுதுணையாயிருக்கும் நெஞ்சையும், ''நாடாத மலர் நாடி நாடோறும்'' (திருவாய் 1-4-9) என தேடிக் கிடைக்காத மலர்களை நாடிக் கண்டு கொணர வலிமை பொருந்திய கால்களையும், ''தேனே மலரும் திருப்பாதம்'' (திருவாய் 1-5-5) என தேனெழுகும் தாமரை போன்ற மிக இனியதான அவன் திருவடிகளில் சேர்ப்பிக்க, நிறைந்து கிடக்கும் தாமரை மலர்களைக் கொணரப் பாங்கான நீண்ட துதிக்கையையும் பெற்றிருக்கிருேமேயென்று பெருமிதத்தோடு திகழ்ந்தது.

அவன் தகுதிக்கும், அவன் உகப்பிற்கும் ஏற்ற புஷ்பங்களையல்லவோ கொணர வேண்டும். ஆகவே ''எண் திசையும் உள்ள பூக்கொண்டு'' (திருவாய் 4-7-8) என்றவாறு நானு திக்குக்களிலும் அலைந்து, கடைசியில் ஓர் மடுவில் அழகிய தாமரை மலர்கள் மலர்ந்திருப்பதைக் கண்டுகளிப்புற்றது. இயல்பிலேயே மதங்கொள்ளும் சுபாவமுடையது. நீண்ட வலிமிக்க துதிக்கை இவற்ருலே உண்டான பெருமை பொங்க மிடுக்கோடு பின் வருவதையறியாது அம்மடுவினுள் இறங்கிற்று. தன் நீண்ட துதிக்கையால் மலர்ந்த அம்மலர்களைக் கொய்தது. ஐயோ! பாவம்! ஒரு முரட்டு முதலை திடீரெனத் தோன்றி அதன் காலைக் கவ்விப் பிடித்து நீரினுள்



3

# திருமலையில்
## தி. தி. தேவஸ்தான
# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| காட்டேஜ் விவரம் | | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| டி. பி. சி. | | ரூ. 25/- ரூ. 15/- ரூ. 10/- |
| டி.பி.சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | | ரூ. 10/- |
| ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | | ரூ. 20/- |
| ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | பெரியன | ரூ. 40/- |
| ,, ,, | சிறியன | ரூ. 20/- |
| ஹில் வ்யூ காட்டேஜ் | | ரூ. 10/- |
| சங்கு மிட்டா காட்டேஜ் | | ரூ. 20/- |
| சேஷாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| அஞ்சனாத்ரி காட்டேஜ் | | ரூ. 20/- |
| கருடாத்ரி நகர் காட்டேஜ் | | ரூ. 20/- |
| திருமணக்கூடம் (3-வது சத்திரம்) | | ரூ. 15/- |
| சிறப்பமைப்பு கொண்ட காட்டேஜ்கள் | | ரூ. 75/- |
| டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | | ரூ. 50/- |

எஸ். வி. விருந்தினர் விடுதி,

| | |
|---|---|
| பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| மோடி பவன் | ரூ. 100/- |

திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)

| | |
|---|---|
| பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| ரூயா காட்டேஜ் எண். 248 | ரூ. 80/- |
| கோகினேனி காட்டேஜ் எண். 226 | ரூ. 80/- |
| சி. சி. காட்டேஜ் எண். 237 | ரூ. 100/- |
| எஸ். எம். சி. கிழக்கு எண். 272 | ரூ. 50/- |
| ஏ. டி. சி. எண். 99 | ரூ. 80/- |
| டி. பி. (உள்பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. 75/- |
| ஏ. டி. சி. மற்றும் டி.பி.சி. ஒரு அறைத்தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 15/- |
| ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

இழுத்தது. அது நீரினுள் இழுக்க யானை கரை நோக்கியிழுக்க இப் போராட்டம் நீண்ட நேரம் தொடர்ந் தது.

இம்மடுவில், முன்பொருகால், ஒரு முனிவன் நின்று கொண்டு தவம் செய்து கொண்டிருந்தான். கந்தரு வன் ஒருவன் விளையாட்டாக நீரினுள் மூழ்கி முனிவனின் காலைப் பிடித்து நீரினுள் இழுத்தான். கோபம் கொண்ட முனிவன், 'நீ நீரினுள் வாழும் முதலையாகக் கடவை' எனச் சாபமிட்டார். சாபத்தாலே தோன் றிய அம்முதலையே யானையின் காலைக் கவ்விப் பிடித்திழுத்தது. யானை வலிவு மிக்க ஜீவனேயாகிலும் தான் வாழும் நிலமல்லா நீர் நிலையிடத் லல்லவா போராட வேண்டியிருக் கிறது. தான் வாழும் இடமாகை யாலும், தான் பிடித்தது தன் இரை யாகையாலும் முதலைக்கு வலிவு மிகுதியாயிற்று. சிறிது சிறிதாகத் தன் சக்தியை இழந்து செயலற்ற நிலையில் நின்றது யானை. உயரத் தூக்கிய தன் துதிக்கையைத் தவிர உடம்பு பூராவும் நீரிலே அழுந்தப் பெற்றது. "நீரார் மலர்க் கமலம் கொண்டோர் நெடுங்கையால்"(சிறிய திருமடல்) என உயரத் தூக்கியிருக் கும் துதிக்கையில் ஏந்தியிருக்கும் தாமரை மலரோ, பறித்து வெகு காலமாகியும் தண்ணீரில் நின்று மலர்ந்தது போல் செவ்வி குன்று திருந்தது!

இனி தன்னால் சமாளிக்க முடியா தென உணர்ந்தது யானை. தன்னைத் தானே காத்துக் கொள்ளும் தன் முயற்சியைக் கைவிட்டது. உலகை யெல்லாம் படைத்துக் காத்திடும் பரம புருடனைக் கூவியழைப்பதைத் தவிர வேறு வழியில்லை. ஆகவே, "நாராயணா ஓ! மணிவண்ணா! நா கணையாய்! வாராய் என்னாரிடரை நீக்க" (சிறிய திருமடல்) என பெரு முழக்கம் செய்து கூப்பிட்டது.

"பேராயிரப் பேராளன்" என்ற வாறு அவனுக்கு ஆயிரம் திருநாமங்

கள் இருப்பினும் அவை 'நாராயணு' என்னும் திருநாமத்திற்கு ஈடாகாது. ஸ்வரூபம், ரூபம், குணம், செல்வம் ஆகிய இவற்றில் ஒவ்வோர் குணத்தைக் கொண்டு திகழ்வதே மற்றைத் திருநாமங்கள். இக்குணங்கள் யாவும் ஒருங்கே கொண்டது 'நாராயண' நாமம் ஒன்றே. இந்நாமம் அவனைத் தவிர வேறொரு தெய்வத்தைக் குறிப்பிடாதே! இதனுல் நாராயணு என அழைத்தது.

"காதல் களிறு" (திருவாய்மொழி 3-1-9) என்றவாறு, நீலமணி போன்ற திருமேனியும், கையுந்திருவாழியுமான அழகைக் காண ஆசைப்பட்ட களிறல்லவா அது? ஆகவே 'மணிவண்ணு' எனக் கூவியது.

படுக்கையாய்க் கிடந்து அவன் திருமேனி தீண்டப்பெற்று இன்பமுறும் ஆதிசேடனைப் போலே நானும் உன் திருமேனி தீண்டப்பெறும் இன்பத்தையருள உன் அழகிய வடிவோடு வாராய் "நாகணையாய்" என அழைத்தது.

இத்துன்ப ஒலி செவிப்பட்டவாறே மாலவன் தன்னை மறந்தான். தன் கையிலே திருவாழி (சக்கரம்) இருந்ததையும் அறிந்திலன் போலும். உடன் வீற்றிருந்த பிரிய மகிஷிமார்களிடமும் யாதும் சொல்லிக் கொள்ளாது சடக்கெனப் புறப்பட்டான். கைலாகு கொடுக்க வந்த சேனை முதலியாரையும் லட்சியம் செய்யாது, உள்ளக் கருத்தறிந்து செயல்படும் திருவடி (கருடன்) மீதமர்ந்து புறப்பட்டான். "நாற்றிசை நடுங்க வஞ்சிறைப் பறவை யேறி" (திருவெழுக் கூற்றிருக்கை) என்றவாறு மிக்க கோபத்துடன் புறப்பட்டான். உலகைப் படைக்கும் போதும், அழிக்கும் போதும் ஏற்படாத கோபமன்றோ இது! இக்கடுங்கோபத்தைக் கண்டு பிரும்மாதி தேவர்களும் என்ன விளையப்போகிறதோ என அஞ்சி நடுங்கினர். தன் திருவடிகளாலே கருடனின் உடலை அழுத்திக் கொண்டு பறந்து வந்தான். இவ்வாலிங்கன சுகத்தைக் கருடன் அனுபவித்தாலும் 'இன்னும் வேகமாய்ப் பறந்து செல்' என்பது போல் ஆயிற்று அவன் அழுத்திக் கொண்டு கிடப்பது. அரையிலே சாத்தியிருந்த பீதகவாடையும் காற்றிலே பறந்தாட, அழகிய திருமுடிக்கேசமோ காற்றிலே நாளு பக்கங்களிலும் பறக்க 'அரை குலேயத் தலை குலேய' என மடுவின் கரைக்கு வந்து சேர்ந்தான்!

"தீராத சீற்றத்தாற் சென்றிரண்டு
கூறாக
ஈராவதனேயிடர் கடிந்தானெம்பெரு
மான்"

(சிறிய திருமடல்) என்றவாறு, பகவத் அபசாரமாகில் கோபம் வந்தேறியாயிருக்கும். இது பாகவத அபசாரமாகையால் கோபமே ஓர் வடிவெடுத்து வந்தது போல் அது தீராத சீற்றமாயிற்று. மடுவினின்றும் யானையையும் முதலையையும் அணைத்தெடுத்துக் கொண்டு வந்து கரையேறினுன். யானையின் கால் விரலுக்கும் யாதொரு கெடுதலும் ஏற்படாதவாறு தன் ஆயுதமாகிய சக்கரத்தாலே முதலையை இரண்டு கூறாகக் கீறிப் போட்டான். யானையைக் காப்பாற்றி என்ன பயன்? என்று அவன் கோபம் தணியாதிருந்தது. அவன் கருடவாகனத்தில் வந்தவனுகத் தெரியவில்லை. கோபமே வாகனமாய் வடிவெடுத்து அதன் மேலே, கோபமே வழிகாட்டப் பறந்து வந்தான்! நோவுபட்ட யானையின் காலைத் தன் வாயால் ஊதி, திருப்பரிவட்டத்தால் ஒத்தி, தன் திருக்கரங்களாலே தடவிக் கொடுத்தும் அது பட்ட துன்பத்தைப் போக்கினுன். இங்கு வியாக்யான சக்ரவர்த்தி பெரிய வாச்சான்பிள்ளை வியாக்யான சூக்தி நம்மையெல்லாம் பரவசத்திலாழ்த்துகிறது.

"பாகவத விரோதியான முதலையையும் அணைத்துக் கொண்டு கரையேற வேணுமோ? என்னும் வினு எழ. 'ராஜபுத்ரனுக்கு மல்யுத்தப் பயிற்சி தருவதற்காக அவனேடு தினந்தோறும் கை கலந்து சண்டையிடும் கைக்கூட்டனுக்கும் பால் சோற்றுருண்டை கொடுத்து வளர்ப்பார்களன்றே? அதே போல் கஜேந்திராழ்வாரோடு சண்டையிட்ட முதலைக்கும் பகவானுலே அணைக்கப் பெறும் இப்பேறு கிடைத்தது" என்று ஆசார்ய சார்வபௌமாகிய பட்டர் அருளியது நம்மையெல்லாம் மகிழ்ச்சியிலாழ்த்துகிறது.

எம்பெருமானைக் கண்ணுரக் கண்டு சேவித்து 'ஐயனே! அழியக் கூடிய தான இவ்வுடலைக் காப்பாற்றிக் கொள்வதற்காகக் கரையவில்லை. உன்னை நேரில் கண்டு சேவித்து இம் மலர்களை உன் திருவடியில் சேர்ப்பிக்கவே அழைத்தேன்' எனக்கூறி அம் மலர்களை அவன் திருவடியில் சேர்ப்பித்து மகிழ்ந்தான். எம்பெருமானிடம் நெஞ்சு குடி கொண்டிருத்தலே சிறந்த செல்வம். இச்செல்வம் குறைவின்றியிருக்கும் கஜேந்திரன் 'ஆனுரிய செல்வன்' (ஸாது நாகவர: ஸ்ரீமான்) எனப் போற்றப் பெறுகிறுன்!

வலிமை மிக்க யானைக்கோ முதலை மட்டுமே விரோதி. 'விரலுக்குத் தக்க வீக்கம்' என்றவாறு அதுபட்ட நோவு ஒரு குறிப்பிட்ட காலமே நீடித்தது. வலிமையற்ற நமக்கோ நம் ஐம்புலன்களுமே விரோதியாய், ஏற்பட்ட நோவுதான் அனுதி காலமாகத் தொடர்ந்து வருவதொன்று. புகலற்றவர்களாகிய நாம் இந்நோவினின்றும் விடுபட எம்பெருமான் திருவடி சரணமடைவதே சாலச் சிறந்தது.



# சரஸ்வதிதேவிக்கோர் தனி ஆலயம்



கலைமகளுக்கென்று ஒரு தனிக் கோவில் தஞ்சை மாவட்டம் மயிலாடுதுறை திருவாரூர் இரயில் பாதையில் உள்ள பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திற்கு மேற்கில் கூத்தனூர் என்ற ஊரில் உள்ளது.

தமிழகத்தில் உள்ள ஒரே கோயில் இதுதான்.

கூத்தனூரில் சிவன் கோயிலும், பெருமாள் கோயிலும் உள்ளது. தெற்குப் பகுதியில் சரஸ்வதி தேவியின் ஆலயம் உள்ளது. சிவன் கோயிலில் துர்க்கை, விஷ்ணு துர்க்கையாகவும், பெருமாள் கோவிலில் பெருமாள், லக்ஷ்மிதேவியை மடியில் அமர்த்திய நிலையில் ஸ்ரீ லக்ஷ்மி நாராயணப் பெருமாளாக உள்ளார். ஒரே ஊரில் துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி கோவில்கள் அமைந்திருப்பது தனிச் சிறப்பான அம்சமாகும். இங்கு ஐயனர், பால சாஸ்தாவாக கையில் மலர்ச் செண்டுடன் விளங்குகிருர்.

கூத்தனூர் என்று பெயர் ஏற்பட்ட காரணத்தை ஊர் மக்கள் கூறுகின்றனர். இங்கு ஒட்டக்கூத்தர் அருள் பெற்றதால் இவ்வூருக்கு கூத்தனூர் என்ற பெயர் ஏற்பட்டது. இங்கு விநாயகர் கூத்தாடியதால் கூத்தனூர் என்று பெயர் ஏற்பட்டதாகவும் கூறுகிறார்கள். சரஸ்வதி அம்மன் கோவிலுக்கு 1941-ல் மகா கும்பாபிஷேகம் நடைபெற்றது. அது சமயம் இக்கோவிலுக்கு வருகை தந்த ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள் அவர்கள், வாயில் படிக்கல்லாக இருந்து பெயர்த்து வைக்கப்பட்ட கல்வெட்டைப் பார்த்து, அதில் புராண வரலாறு இருக்கும் விபரத்தைக் கூறி, அதைக் கோவில் முகப்பில் அமைக்குமாறு கூறினர்கள். சரஸ்வதி அம்மன் கோவிலில் இன்றும் அக்கல்லைக் காணலாம்.

கும்பகோணத்தில் பிறந்த சாரங்கபாணி தீக்ஷிதர் அவர்கள் தவப்புதல்வரான ஸ்ரீ புருஷோத்தமன் ஊமையாக இருந்து தனக்குப் பேசும் திறன் வேண்டும் என்று நினைத்து அப்போது அம்பாள்புரி என்று அழைக்கப்பட்ட இந்த கூத்தனூருக்கு வந்து அம்பாள் குறித்து தவம் செய்யலானன். அதே காலத்தில் விக்கிரம சோழ மன்னரின் அவையில் தலைமைப் புலவராக இருந்த ஒட்டக்கூத்தர் மேலும் தனக்கு வரகவிபாடும் வன்மை பெற வேண்டும் என்று அவரும் கூத்தனூரிலிருந்து கொண்டு தவம் புரியலானர்.

சர்வலோக ஜனனியான மாதா இரு பக்தர்களுக்கும் அருள்புரிய வேண்டி தாசி வேடத்துடன் முதலில் புருஷோத்தமனிடம் சென்றாள். புருஷோத்தமன் சரியான பக்குவநிலை அடையாததால் அவளை தாசி என்று இகழ்ந்து பேசி அனுப்பி விட்டான். இதைக் கண்ட ஒட்டக்கூத்தர் பூர்வ ஜென்ம புண்ய வசத்தால் வந்தவள் அன்னையே என்று பாதகமலங்களில் வீழ்ந்து தனக்கு அனுக்கிரஹித்து அருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். புன்சிரிப்புடன் அருளையும் தயையும் குழைத்து உண்டாக்கிய தாம்பூலத்தைத் தந்து தன் வாக்கினையும் நல்கினள் ஞானம்பிகை. அதுமுதல் கூத்தன் வரகவியானர். இதைக் கண்ணுற்ற புருஷோத்தமன் மனம் வருந்தி தான் செய்த தவறை மன்னித்து தனக்கு அருள்புரிய வேண்டுமென்று வேண்டினன். அன்னை அவனுக்கும் அருள் பாலித்தாள்.

இங்குள்ள 'ஸ்ரீ ஞான சரஸ்வதி தேவி' பத்மாசனத்தில் அமர்ந்துள்ளாள். ஜடாமகுடமும், ஜபமாலை,

**திரு. உ. வெங்கடேசன், *மயிலாடுதுறை.***

கிண்டி (ஜல பாத்திரம்) ஏந்திய இரு மேல் கர கமலங்களும் சின்முத்திரையான யோக முத்திரையும் ஞான உபநிஷத் புஸ்தகமும் தாங்கிய இருகீழ் கர கமலங்களும் மந்தஸ்மித முகமும் மௌன தபோ நிலை உபதேசமுமாய் காட்சியளிக்கிருள்.

இக்கோவிலில் பிரம்மாவுக்கு ஒரு சிலை உள்ளது, மற்றும் சிவலிங்கமும், விநாயகர் சிலையும் உள்ளது. இக்கோவிலில் நவராத்திரி பன்னிரண்டு நாள் உற்சவமும் பிறகு பத்து நாள் ஊஞ்சல் உற்சவமும் நடத்துகின்றனர்கள். தமிழ் வருடப் பிறப்பிலிருந்து ஒரு மண்டலம் லக்ஷார்ச்சனை நடைபெறும்.

'கூத்தனூர்' சென்று தனி ஆலயத்தில் எழுந்தருளியுள்ள 'ஸ்ரீ ஞான சரஸ்வதி தேவியை' தரிசித்து அருள் பெறுவோமாக. ○

## சிறுவர் பகுதி

# ஜராசந்தன்

**ஆசை..**அது யாரை விட்டது? ஓயாது ஆர்ப்பரித்து எழும் கடல் அலைகளைப் போல் மனம் என்னும் கடலிலும் ஆசை என்னும் அலைகள் ஓயாது அடித்துப் புரண்டு கொண்டு தான் இருக்கிறது.

'ஆசைக்கு அளவே இல்லை' என்பார்கள். அந்த ஆசை ஆசையாக இருக்கும் வரையில் ஆபத்தில்லை. அதுவும் பேராசையாக மாறும் போது ஆபத்துக்களும் தோன்றுகின்றன. ஆபத்துக்களைத் துணிச்சலோடு எதிர்கொள்ளும் மனத் திண்மை இருந்தால் மட்டுமே ஆசைகளை வளர்த்துக் கொள்ளலாம். இல்லையென்றால் அதற்கு ஆரம்பத்திலேயே அணை போட்டுவிடுவது நல்லது.

தரும புத்திரனும் தன் சகோதரர்களுக்கு இந்தக் கருத்தையேதான் வலியுறுத்திச் சொன்னான். அவர்கள் கேட்டால்தானே? போதாக் குறைக்கு துவாரகாபுரி மன்னனை கிருஷ்ணனும் அல்லவா எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றுவது போல் அந்த ஆசைக்குத் தூபம் போடுகிறான்...! அது சரி. பாண்டவர்களுக்கு அப்படி என்னதான் ஆசை வந்து விட்டது? அதுவும் இளம் பிராயத்தில் துரியோதனாதியர்களுக்குப் பயந்து கொண்டு, பிராமணர்களைப் போல் வேஷம் தரித்து வாழ்ந்தவர்களுக்கும் ஆசை வந்து விட்டதே!

'நிலை மாறினால் குணமும் மாறி விடும்' என்பார்களே! அது உண்மை தானே? ஆம்! அது உண்மை தான்...என்பதை அந்தக் காலத்திலேயே நிரூபித்து விட்டார்கள் தரும புத்திரனின் சகோதரர்கள். நாடு நகரங்கள் அனைத்தும் இழந்து உற்றார் உறவினர்களைத் துறந்து துருபத ராஜனிடம் அடைக்கலம் புகுந்த பாண்டவர்களுக்கு, பீஷ்மரின் யோசனைப்படி திருதராஷ்டிரன் காண்டவ பிரஸ்தத்தை கொடுத்தான். இதன் மூலம் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையே மேலும் பகை வளராமல் சமாதானமும் செய்து கொண்டான்.

பாழடைந்த நிலையில் இருந்த காண்டவ பிரஸ்தத்தை மனமுவந்து ஏற்றுக்கொண்டான் தருமபுத்திரன். அதைப் புதுப்பித்து இந்திர பிரஸ்தம் என்று பெயரும் சூட்டி உலகமே வியக்கும்படி இருபத்தி மூன்று வருடங்கள் அரசாட்சியும் செய்தான். அதன் பின்தான் அந்த ஆசை அவர்களுக்குத் தோன்றிவிட்டது. ஆசை என்றால் சாதாரண ஆசையா அது? தருமபுத்திரன் அரசர்களுக்கெல்லாம் அரசனை 'ராஜாதி ராஜன்' எனும் பட்டத்தைப் பெறவேண்டுமென்பதுதான் அந்த ஆசை! பதவி மோகம் அந்தக் காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதையே இது காட்டுகிறது.

பாண்டவர்களின் தகுதிக்கு இது ஒன்றும் பிரமாதமான ஆசை இல்லை தான். ஒரு ராஜசூய யாகத்தைச் செய்து விட்டால் போதும்! அவர்கள் விரும்பியபடி 'ராஜாதி ராஜ' பட்டத்தைப் பெற்று விடலாம். ஆனால் அதைச் செய்வதில்தான் பிரச்சினை உள்ளது. ராஜசூய யாகம் செய்யும் முன்பு அதைச் செய்யப்போகும் அரசன் மற்ற தேசத்து அரசர்களிடம் அனுமதி கேட்பான். அப்படி அனுமதி கேட்பது, யாருக்காவது இதில் ஆட்சேபம் இருக்கிறதா இல்லையா என்பதை அறியவே. அப்படி யாருக்கேனும் ஆட்சேபம் இருந்தால் உடனே அவர்களோடு போர் புரிந்து வென்ற பின்னரே இந்த யாகத்தைச் செய்ய வேண்டும்.

"தங்களைப் பொறுத்த வரையில் இந்த யாகத்தைச் செய்ய யாரும் தடையாய் இல்லை" என்றே பீமனும் அர்சுனனும் நினைத்தார்கள். ஆனால்...தரும புத்திரன் அவ்வாறு நினைக்கவில்லை. சகோதரர்களின் ஆசையை ஆரம்பத்திலேயே அடக்க நினைத்தான். ஆனால் தருமனுக்கு அது இயலாத காரியமாகி விட்டது. ராஜசூயம் செய்ய வற்புறுத்தும் சகோதரர்களின் பேச்சை ஏற்கவும் மறுத்தான். "அப்படியே தான் அந்த யாகத்தைச் செய்யத் துணிந்தாலும் அதற்குண்டான தகுதிகள் அனைத்தும் தன்னிடமிருக்கிறதா?" என நினைத்துக் குழம்பினான். இறுதியில் "சகோதரர்கள் சொல்லுகிறார்களென்று அவசரப்பட்டு எந்த முடிவுக்கும் நாம் வந்து விடக் கூடாது. இந்த விஷயத்தில் கிருஷ்ணனின் மேலான ஆலோசனையைக் கேட்ட பின்னரே ஒரு முடிவுக்கு வர வேண்டும்" என நினைத்துக் கொண்டான். உடனே கிருஷ்ணனை அழைத்து வரும்படி துவாரகைக்குத் தூதும் அனுப்பினான்.

குமாரி டி. ஆர் மேகலை
செங்கல்பட்டு

"தரும புத்திரன் தன்னை அழைத்தான்" என்ற செய்தியைக் கேட்டதுமே, கிருஷ்ணன் இந்திர பிரஸ்தத்துக்கு விரைந்து வந்து சேர்ந்தான்.

"தரும புத்திரா! எதற்காக என்னை இத்தனை அவசரமாய் துவாரகையிலிருந்து வரவழைத்தாய்?"

"ராஜசூய யாகம் செய்யச் சொல்லி என் சகோதரர்களும் சிநேகிதர்களும் என்னை வற்புறுத்துகிறார்கள். அந்த யாகத்தைச் செய்து,

ராஜாதிராஜ பட்டத்தைப் பெறும் தகுதி எனக்கு இருக்கிறதா? என் குறை நிறைகளை அறிந்த நீ தான் இதற்கு தகுந்த ஆலோசனை சொல்ல வேண்டும்.'' என்று தருமபுத்திரன் கிருஷ்ணனிடம் கவலையோடு கேட்டான்.

''தரும புத்திரா உனக்கு ஏனிந்த குழப்பம்? நீ ராஜசூய யாகம் செய்யத் தகுந்தவனே! உன்னைச் சேர்ந்தவர்களின் ஆசையும் நியாயமானதே! ஆனால் ஜராசந்தன் உயிருடன் இருக்கும் வரையில் நீ இந்த யாகத்தைச் செய்ய முடியாது.'' என்று சொல்லி நிறுத்தினான் கிருஷ்ணன். ''ஜராசந்தனு? யார் அது?'' எனப் பாண்டவர்கள் ஏககாலத்தில் கேட்க கிருஷ்ணன் தொடர்கிறான்.

''தோல்வி என்பதையே அறியாத ஒருவன் இருக்கின்றான். அவன் தான் ஜராசந்தன். அவன் இருக்கும் வரை வேறு யாரும் ராஜாதிராஜப் பதவியை அடைய முடியாது. அவன் அடையவும் விடமாட்டான். அவனுடைய பலத்தைக் கண்டு க்ஷத்திரியர்கள் எல்லாரும் அஞ்சுகிறார்கள். பலம் மிக்க சிசுபாலன் கூட ஜராசந்தனைப் பணிந்து போற்றுகிறான். உக்கிர சேனனின் மகனான கம்சன் அவனுக்கு மருமகன். அவனையே ஜராசந்தன் தன் துணையரசனாக்கிக் கொண்டு பிற நாட்டு அரசர்களையெல்லாம் ஜெயித்துச் சிறை பிடித்து இருக்கிறான். நானும் எனது சேனையும் இடைவிடாமல் சில காலம் ஜராசந்தனை எதிர்த்தோம். அதனால் பலன் ஏதுமில்லை? அப்போது நடந்த போரில்தான் கம்சன் என்னால் கொல்லப்பட்டான். அவனை எதிர்த்துத் தோல்வி கண்ட பின் ஏற்பட்டத் தொல்லைகளைத் தவிர்க்கவே நாங்கள் வடமதுரையை விட்டுவிட்டு மேற்கே துவாரகைக்கு வந்து விட்டோம். அங்கே புதியதாக கோட்டையையும் நகரங்களையும் அமைத்துக் கொண்டோம். நீ ராஜ


ஓம ஸ்ரீமாத்ரே நம:

ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ஸ்ரீ திருமுருக கிருபானந்தவாரியார்

மற்றும் பல மகான்களால் ஸ்ரீமுகமும் ஆசியும் அருளப் பெற்று நவசக்தி நிலையத்தாரால்

உருவாக்கப்படும் பூஜைக்குரிய யந்த்ரங்கள்.

| | | ரூ. |
|---|---|---|
| | ஸ்ரீ மகாமேரு 16×16, 10×10, 6×6, 4½×4½ செ.மீ. (விலை கடிதம் மூலம் தெரிவிக்கப்படும்) | |
| 2. | ஸ்ரீ மகாலக்ஷ்மி மஹாயந்த்ரம் 24×24 செ. மீ. | 1000/- |
| 3. | ஸப்தஸதி மகா நவவர்ணம் (64 இதழ்கள்) 24×24 செ. மீ. | 1000/- |
| 4. | மகாசுதர்ஸனம் மற்றும் மற்றைய யந்த்ரங்கள் (16 செ. மீ. × 16 செ. மீ) ஒவ்வொன்றும் | 500/- |
| 5. | ஸ்ரீ சக்கரம் 8×8 செ. மீ. | 125/- |
| 6. | ஸ்ரீ சக்ரம் 5×5 செ. மீ. | 50/- |
| 7. | ஸ்வயம்வரா 8×8 செ. மீ. | 125/- |
| 8. | கார்த்தவீர்யார்ஜுனர் 8×8 செ. மீ. | 125/- |
| 9. | ஸர்வ ஜன மன தான ஆகர்ஷண யந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 10. | அஷ்டலக்ஷ்மி யந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 11. | மகாவிஷ்ணு 8×8 செ. மீ. | 125/- |
| 12. | மச்சயந்த்ரம் 8×8 செ. மீ. | 125/- |
| 13. | தஸமகாவித்யா (10 யந்த்ரங்கள்) ஒவ்வொன்றும் | 125/- |
| 14. | ஸ்வர்ண ஆகர்ஷண பைரவர் 8×8 செ. மீ. | 125/- |
| 15. | லக்ஷ்மிகுபேரன் 8×8 செ. மீ. | 125/- |
| 16. | மற்றைய யந்த்ரங்கள் விலை 8×8 செ. மீ. | 125/- |
| 17. | எலக்ட்ரானிக் காப்பர் பேங்கிள்ஸ் | 20/- |
| 18. | ஒரு பக்கம் ஸுதர்ஸனமும் மற்றொரு பக்கம் திருஷ்டி நிவர்த்தியும் கொண்ட பதக்கம் | 60/- |
| 19. | கண்திருஷ்டி நிவர்த்தி யந்த்ரம் (சட்டத்துடன்) | 55/- |
| 20. | மற்றைய பதக்கங்கள் (ஒவ்வொன்றும்) | 55/- |
| 21. | ஒரு பக்கம் ஐயப்பனின் திருவுருவமும் மறுபக்கம் ஐயப்ப சன்னிதானமும் கொண்ட பதக்கம் | 55/- |
| 22. | தத்தாத்ரேய யந்த்ரம் (வண்டிகளுக்கு) தீய விளைவுகளைக் களைய | 40/- |
| 23. | வெள்ளி இழையினால் கோர்க்கப்பட்ட ஒரிஜனல் ருத்ராக்ஷமாலை மற்றும் ஸ்படிகமாலை ஒவ்வொன்றும் | 275/- |
| 24. | வெள்ளி இழையில் கோர்க்கப்பட்ட துளசிமணி மாலை (54 மணிகளைக் கொண்டது) | 90/- |
| 25. | வெள்ளி இழையில் கோர்க்கப்பட்ட தாமரை மணி மாலை (54 மணிகளைக் கொண்டது) | 125/- |

மேற்கூறிய பொருட்களைத் தவிர வேறுபல 108 யந்த்ரங்கள் எங்கள் நவசக்தி நிலயத்தில் கிடைக்கும். கோயில்களுக்கு, வீடுகளில் உள்ள பூஜை அறைகளுக்கு, மற்றும் கிராம சமய வழிபாட்டுக்கூடங்களுக்கு வேண்டிய யந்த்ரங்களும் கிடைக்கும். ஒவ்வொரு யந்த்ரத்தின் விலை ரூ.101/- இலவச விலைப்பட்டியலுக்கு 50 பைசா தபால் தலையுடன் கீழ்க்கண்ட முகவரியுடன் தொடர்பு கொள்ளுங்கள். வெளிநாட்டு சரக்காணைகள் 25% அதிக விலையுடன் ஏற்றுக்கொள்ளப்படும்.

விஸ்வகர்மகுலய. ஸ்வாமிஜி ஸ்ரீ எஸ். டி. முருகபூஷணம்

ஸ்ரீவித்யா உபாசகர் & தலைவர் நவசக்தி நிலையம்,
153, லாயிட்ஸ் ரோடு, (ஸ்டேட் பேங்க் எதிரில்) கோபாலபுரம்,
சென்னை- 600086. தொலைபேசி : 472013.

[ஆங்கிலம் மற்றும் தமிழில் மட்டுமே தொடர்பு கொள்ளுதல் வேண்டும்.]

''லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து''

சூய யாகம் செய்வதை துரியோதன னும் கர்ணனும் கூட ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனுல் ஜராசந்தன் இதற்கு ஒப்புக்கொள்ள மாட்டான். ஒன்று அவனைக் கொல்ல வேண்டும். இல்லையென்ருல் அவனைப் போரில் வென்று அவனுல் சிறைபிடிக்கப் பட்ட அரசர்களை விடுவிக்க வேண் டும். இப்படி ஏதாவது செய்தால் தான் நாம் இராஜசூய யாகம் செய்யலாம்'' என்று கூறி நிறுத்தினுன் கிருஷ்ணன்.

அதுவரை கிருஷ்ணன் சொன் னதையெல்லாம் கவனமாய் கேட்டு வந்த தருமபுத்திரன் ''கிருஷ்ணு! ஜராசந்தனை வெல்ல உன்னுலேயே முடியாதபோது எங்களால் மட்டும் அவனை எப்படி வெல்ல முடியும்? மிக்க பலசாலியான சிசுபாலன் கூட அவனை எதிர்க்க அஞ்சுகிருன் என் ருல் எங்களால் மட்டும் அவனை என்ன செய்ய முடியும்? அடைய முடியாத பதவியை அடைய நினைப் பது முற்றிலும் தவருனதே. பரந் திருக்கும் இந்த நிலப்பரப்பு மிகப் பெரியது. மிகுந்த செல்வங்களையும் கொண்டது. அவரவர் நாட்டில் என்னைப் போல் சிறப்புடன் ஆட்சி செய்து வாழும் அரசர்கள் ஏராளம். என்னைப்போல் அமைதியை விரும் பும் ஒருவன் 'சாம்ராஜ்ய' பதவியை அடைய நினைப்பது பெருந்தவறு. அதனுல் நான் பீமார்ச்சுனர்களின் யோசனையை நிராகரித்து விடுகி றேன். இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தியாய் இருந்தாலே நன்மை அடைவோம். வீண்முயற்சி கள் வேண்டாம். ஆசைக்கு அளவே யில்லை? வேண்டாம் இந்த விபரீதப் பேராசை'' என்று தம்பிகளின் யோசனையைப் புறக்கணித்தான்.

தருமபுத்திரனின் அடக்கமும் அறிவுரையும் பீமனுக்குப் பிடிக்க வில்லை. ''முயற்சி ஒன்றுதான் வீர னுக்கு அழகு. புருஷ ஜென்மம் எடுத்தபின் முயற்சி செய்யாமல் இருப்பதில் என்ன பயன்? நாம் என்ன...வேதம் ஓதுபவர்களா, போதும் என்று திருப்தியடைந்து சும்மா இருக்க? தருமபுத்திரன் ஏன் இவ்வளவு தயக்கம் காட்டுகிருர் ஜராசந்தனை எதிர்க்க? தன் பலத்தை தானே அறியாமல்தான் இந்த ஆசைக்கு அணை போடு கிருரோ...தரும தேவதையின் புதல் வர். பயத்தை விட்டுத் தகுந்த உபாயங்களைப் பயன்படுத்தினுல் தன்னைவிட பலசாலியான அரசனை யும் வென்று விடலாம் என்பதை ஏன் மறந்தார்? என் தேக பலமும் அருச்சுனனின் சாமார்த்தியமும் கிருஷ்ணனின் சாதுர்யமும் ஒன்று சேர்ந்தால்...நாம் எதைத்தான் சாதிக்க முடியாது? நாங்கள் மூவ ரும் ஒன்று சேர்ந்து ஜராசந்தனின் பலத்தை அடக்கி விடுவோம். நீர் அஞ்ச வேண்டாம். பேசாமல் இந்த யோசனைக்கு ஒப்புக் கொள்ள வேண் டும் தரும புத்திரரே!' என்று பீமன் தரும புத்திரனை உற்சாகப்படுத்தி னுன்.

''தருமபுத்திரா! பீமனின் இந்த யோசனை எனக்குப் பிடித்திருக் கிறது. ஜராசந்தன் கொல்லப்பட வேண்டியவன்தான். அதில் உனக்கு சந்தேகமே வேண்டாம். எண்பத்தி யாறு அரசர்களைச் சிறையில் வைத் திருக்கிருன். இன்னும் பதினுன்கு அரசர்களை சிறைப்பிடித்த பின் அவன் ராஜசூய யாகம் செய்வான். அந்த யாகத்தில் நூறு அரசர்களை யும் ஒரே நேரத்தில் யாகப் பசுக்க ளாக கொன்று விழா நடத்தவும் ஏற் பாடு செய்திருக்கிருன். பீமனின் யோசனைக்கு அருச்சுனன் ஒப்புக் கொண்டால், மூவருமாய்ச் சேர்ந்து சரியான யுக்திகளின் மூலம் அந்தக் கொடியவனைக் கொல்வோம். பின் அவனிடம் சிறைப்பட்டிருக்கும் அர சர்களை விடுவிப்போம்''. என்று பீம னின் யோசனையை ஆதரித்தான் கிருஷ்ணன்.

கிருஷ்ணனே பீமனின் யோசனையை ஆதரித்து பேசிய போதும் தருமபுத் திரனின் மனம் இந்த யோசனைக்கு ஒப்பவில்லை. அதனுல் அவன் ''கிருஷ்ணு! இந்த பிரபஞ்சத்தின் இயக்கங்களுக்கு மூலகாரணமாய் இருப்பவர்கள் சூரியனும், சந்திர னும். அதைப் போல் எனது முயற்சி களுக்கும் வெற்றி தோல்விகளுக்கும் உற்ற துணை பீமார்ச்சுனர்கள். ''ராஜாதி ராஜ''ப் பதவியின்மீதுள்ள ஆசையினுல் இந்த யோசனையை ஏற்றுக் கொண்டு அவர்களை அனுப்ப என் மனம் இடங்கொடுக்கவில்லை. இதனுல் ஆபத்து ஏதேனும் ஏற்பட்டு அவர்களை இழக்கவும் நேரிடலாம். அதனுல் இந்த விபரீதமான ஆசை யையும் அபாயகரமான யோசனையை யும் விட்டு விடுவதே நமக்கு நல்லது என்றே நான் எண்ணுகிறேன்'' என்று மீண்டும் அந்த யோசனையை நிரா கரித்தான்.

அதுவரையில் அமைதியாய் இருந்த அர்ச்சுனன் தன் கருத்தைச் சொன் னுன். ''வீரமே க்ஷத்திரியர்களுக்கு பிரதான அணிகலன். தரும புத்திரர் இதை அறியாதவரா? புகழ் பெற்ற பரத குலத்தில் பிறந்த நாம் பராக் கிரமச் செல்களைச் செய்யாமல் வாழ் வைக் கடத்துவதில் என்ன பலன்? காரியத்தில் பிரவேசிக்க மனமில்லா மல் க்ஷத்திரியனுக்கு பேரும் புகழும் எவ்வாறு உண்டாகும்? வெற்றிக்குக் காரணம் முயற்சியும் ஊக்கமும்தான். அதை விடுத்து, தன் பலத்தை தானே அறியாமல் மௌனம் சாதிப்பதன் மூலம் நாம் எந்த பராக்கிரம செயலை சாதித்துவிட முடியும்? இராஜசூயம் செய்யும் தகுதி நமக்கு இல்லை என்று தரும புத்திரன் ஏன் நினைக்கிருர்! வேண்டுமானுல் நாம் முதுமையடைந் ததும் காஷாயம் தரித்து வனத்தில் விரதம் இருப்போம். இப்போது குல தருமத்திற்கு மெருகூட்டும் க்ஷத்திரியர்களின் வீரத்திற்கு ஏற்ற பராக்கிரம செயல்களில் ஈடுபடு வோம். அதுவே நமக்கு நல்லது.'' என்று சொல்லி நிறுத்தினுன்.

(அடுத்த இதழில் முடியும்)




# குரு பூர்ணிமை

குருர் பிரம்மா குருர் விஷ்ணு
குருர் தேவோ மஹேஸ்வர:
குருர் சாக்ஷாத் பரப்பிரும்ம
தஸ்மை ஸ்ரீகுரவே நம:

தாய், தந்தை இவர்களை முன்னறி தெய்வங்களாக வகுத்த நம் முன்னோர்,அடுத்தபடியாகக் குருவைக் கடவுளாக எண்ணி வணங்கவேண்டும் என்று கூறிப்போந்தனர். நமது வேதங்கள் 'அன்னை, பிதா, குருவைத் தெய்வமாகக் கொள்' (ஆசார்ய தேவோபவ:) என்று உரைக்கின்றன.

அன்பினைத் தாயும், ஆரோக்கியத்தைத் தந்தையும். அறிவைக் குருவும் ஊட்டுகிறார்கள். எத்தனையோ பண்டிகைகள் வருகின்றன. அவற்றுள் குருவுக்கும் ஒன்றை ஏற்படுத்தி முக்கிய ஸ்தானம் அளித்துள்ளனர் நம்மவர். அதுதான் குருபூர்ணிமை.

ஆஷாட மாதத்தில் (ஆனி அல்லது ஆடி) வரும் இதனை 'வியாச பூர்ணிமை' என்றும் சொல்வதுண்டு. வேதாந்த சூத்ரங்கள் இயற்றிய வியாச பகவானைக் குறித்து அன்று பூஜை செய்கிறோம். நம் நாட்டில் அநேகமாக இதனைத் துறவிகளே செய்து வருகின்றனர். வடநாட்டில் உள்ளவர்கள் தத்தம் வித்யா குருவை வணங்கிப் பாதகாணிக்கைச் செலுத்துவது வழக்கம்.

குருபூர்ணிமையன்றுதான் சாதுர் மாதமாகிய மழைக்காலம் தொடங்குவதால், துறவிகள் அப்போது ஒரே இடத்தில் தங்கிருக்கவேண்டுமாம்.

பொதுவாக எந்த மந்திரத்தையும் குருவின் மூலமே நாம் உபதேசம் பெறவேண்டுமென்பது நியதி. அப்போதுதான் அதில் பலன் இருக்கும். எவனொருவன் குருவனிடத்தில் அத்யந்த பக்தி கொள்கிறானோ, அவனுக்குக் குரு உபதேசிக்காத மந்திரங்கள்-விஷயங்கள்கூட தானே தெரியவரும் என்று கூறுவர்.

ஆதிசங்கரர் சிறு வயதிலேயே சகலமும் கற்றிருந்தாலும் தனக்கென குருவை நாடி நர்மதா தீரம் சென்றார். கீதாசார்யனே 'சாந்தீபினி' என்ற முனிவரிடம் சிஷ்யனாகி வித்தைகள் கற்றாராம்.

தக்ஷிணாமூர்த்தியான சிவபெருமானே உலக குரு. சின்முத்திரை காட்டும் இச்சிலாரூபம் சிவாலயங்களில் தெற்கு நோக்கி வீற்றிருப்பதைக் காணலாம். இவரைத் 'தென்முகக் கடவுள்' என்று தமிழிலக்கியம் கூறும்.

தக்ஷிணாமூர்த்தியின் சிஷ்யர்கள் சனகாதி முனிவர்கள். பொதுவாக எல்லாச் சிவன் கோயில்களிலும் 'ஞான தக்ஷிணாமூர்த்தியை' யே காண்கிறோம். ஆனால் மாயவரம் வள்ளலார் கோயிலில் மேதா தக்ஷிணாமூர்த்தி மற்றும் யோக தக்ஷிணாமூர்த்தி, வீக்ஷிண தணாமூர்த்தி முதலிய செப்பு விக்ரகங்கள் மாறுபட்டவை. சென்னைக்கருகிலுள்ள திரிசூலம், திருவட்டீஸ்வரன் பேட்டை முதலிய கோயில்களிலும் வெவ்வேறு தக்ஷிணாமூர்த்தி ரூபங்கள் உள்ளன. எல்லாவித தக்ஷிணாமூர்த்திகளைப் பார்க்க வேண்டுமாயின் காஞ்சி கைலாசநாதர் ஆலயத்துக்கே செல்ல வேண்டும்.

பகவத் கீதையின் ஆசார்யன் ''ரிஷிகளில் நான் வியாச மஹரிஷியாக உள்ளேன்'' என்று அருளியுள்ளான்.

நடாதூர் வி. திருமகள்
பாண்டிச்சேரி

எனவேதான் ஸ்ரீ காமகோடி மடத்தில் குருபூர்ணிமையன்று ஸ்ரீ க்ருஷ்ணனுக்கே பூஜை செய்யப்படுகிறது.

ஒருவர் எவ்வளவுதான் ஸ்வயமாகக் கற்றாலும் குருவின் கீழ் இருந்து உபதேசம் பெறாமல் எந்த மந்திரமும் சித்தியாகாது என்று நம் முன்னோர் வகுத்துள்ளனர். ஆகையால்தான் சைவ, வைணவ மத ஆசார்யர்கள்

தமக்கென ஒரு குருவைத் தேடிக் கொண்டனர்.

'உலகப் பொதுமறை'எனப் புகழப் படும் வள்ளுவச் சித்திரத்திலும்,

" இருமை வகைதெரிந்து ஈண்டு
அறம்பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு "

எனத் துறந்தார் பெருமை பேசப்படு கிறது.

கம்பராமாயணத்திலும் மஹா பாரதத்திலும் கூறுத குருவின் சிறப் புக்களா? துரோணர் - ஏகலைவன் கதையே குருபக்திக்கு ஓர் உரைக்கல் லாகிறதே.

தேவர்களின் குரு ப்ரஹஸ்பதி. அசுரர்களின் குரு சுக்ராச்சாரியார். இவர்களின் வாக்கைச் சிரமேற் கொண்டே தேவரும், அசுரரும் காரி யங்கள் ஆற்றினர் என்று நூல்களின் வாயிலாக அறிந்து கொள்கிறோம்.

மூதறிஞர் இராஜாஜி தம் 'வியா சர் விருந்து' என்ற ஒப்பற்ற நூலில் குருவின் பெருமைகளை அடுக்கிக் கொண்டு போகிறார். இதன்மூலம் குருவைப்பற்றி ஏதும் அறியாதவரும் அவரின் சிறப்புக்களை நன்குஉணர்ந்து கொள்ள முடிகின்றதாம்.

இக்காலத்தில் ஒவ்வவாரு சமயத்தி லும் தனித்தனியே சமய குருமார் கள் ஏற்பட்டு மக்களை நல்வழிப்படுத் துவதைப் பார்க்கிறோம். ஆனால் பழந்தமிழகத்தில் ஒவ்வொரு மன்னர் சபையிலும் "ஆஸ்தான குரு" வாக ஒருவர் வீற்றிருந்து, மன்னன் தவறு செய்யுங்கால், அவனை அஞ்சாது இடித்துரைத்துத் திருத்துவார். ஆக அரசியலும் குருவும் இணைந்து மக்களையும், மன்னனையும் தம் நல் லுரைகளால் நன்னெறிப்படுத்தி யதை உணர்ந்து உள்ளம் உவக்கி றோம்.

தைத்திங்கள், வியாழக்கிழமையில் வரும் பௌர்ணமிக்கு 'குரு புஷ்யம்' என்று பெயர். வருடத்தில் சில சம யம் குருபூர்ணிமை 2 தடவைகள்கூட வருவது உண்டு.

குருவின் மூலம்தான் இறைவனை அடையமுடியும் என்றறிந்த நம் முன் னோர் 'குரு நிந்தனை ஆகாது' எனப் போதித்தனர். குருவின் சாபத்துக்கு மிகவும் அஞ்சினர். 'குருவையே மிஞ் சிய சிஷ்யன்' எனும் வாக்கியத்தில் வரும் 'ஏகாரத்தை'க் கவனித்தால் குருவின் சிறப்பு புரியும்.

'தந்தை தாய் குரு தெய்வம்' என் பதனுல் குருவிற்குப் பின்னர்தான் தெய்வ வணக்கமே என்பது வலி யுறுத்தப்படுகின்றதாம்.

குரு பூர்ணிமையின் பெருமை மற் றும் அன்றைய தினத்தில் அனுஷ் டிக்கப்படும் பூஜை புனஸ்காரங்கள் பற்றி 'பதினெட்டு புராணங்கள்' எனப்படும் 'அஷ்டாதசபுராணங்க ளில்' கூறப்படுதல் காண்க.

குருபூர்ணிமை பூஜை தமிழ்நாட் டில் எல்லா மடங்களிலும், மற் றும் வடஇந்தியாவிலும் மிக்ககோலா கலமாகக் கொண்டாடப்படுகிறது.

ஸ்ரீமடத்தில் இப்பூஜைக்கென்றே தனி மண்டபம் அமைக்கப்பட்டு தேவதைகள், ரிஷிகள், குருபரம்பரை யில் வந்த ஆசார்யர்களுக்குத் தனித் தனியே பூஜை நடக்கும்.

நாம் எந்த வேதங்களைச் சார்ந்தவ ராயினும் அந்த வேதத்தை நமக்கு உபதேசம் செய்த ரிஷிகளுக்கு உப தேசித்தது ஸ்ரீவியாசர்தான். வேதத் தை அன்றுடம் அத்யயனம் பண்ணு விடினும் சிராவணத்தன்று 'வேதாரம் பம்' செய்கிறோம்.

ஸ்ரீகாஞ்சிப் பெரியவாள் சொல்லு வார்கள்: "வேதம் இத்தனை காலம் வாழும்படிச் செய்த வியாசருக்குக் கௌரவம், மரியாதை அளிக்கப்பட வேண்டும். வியாசரால்தான் நாம் இன்று கொஞ்சமாவது க்ஷேமமாக இருக்கிறோம்".

" தெளிவு குருவின் திருமேனி காணல்
தெளிவு குருவின் திருவார்த்தை
கேட்டல்
தெளிவு குருவின்திருநாமம்சொல்லல்
தெளிவு குரு உரு சிந்தித்தல்தானே"

என்னும் திருமூலரின் வாக்கைச் சிர மேற்கொண்டு, குருவை ஆராதித்து, குருவின் அனுக்ரஹம் பெறுவதன் மூலம் சகல ஐச்வர்யங்களையும் அடை வோமாக! ★



ஸ்ரீ ராமலிங்கேஸ்வர ஆலயம். தர்மவரம்—ஆ. பி.

திரு. சங்கரசர்மா—திருப்பதி.

# இரும்பும் கரும்பும்

உலகில் மானிடராகப் பிறந்த அனைவரும் மனம், வாக்கு, காயம் ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பட்டுள்ளனர். எண்ணத்தில் உள்ளது சொல்லாக உருப்பெற்றுச் செயலாக முடியும்.' செயல் வடிவில்தான் நன்மை தீமை ஆகியவற்றை உணர முடியும். எனவேதான் மனத்தைத் தூய்மையாகவும் செம்மையாகவும் வைத்துக் கொண்டால் சொல்லும் செயலும் செம்மையாக அமையும் என்பர். சலனமுள்ள மனத்தில் அமைதியிருக்காது. பண்படுத்தப் பட்ட நிலம் எவ்வாறு பயிர் செய் வதற்கு ஏற்றதாக அமைகிறதோ அதே போன்று பக்குவப்பட்ட மனம் சமய உணர்வில் திளைத்து இறையின் பத்தைச் சுவைக்கிறது. சமயச் சான்றோரது வரலாறும், வாழ்வியல் நெறிகளும், அவர்களது திருப்பாடல்களும் மனத்திற்கு ஒருவித அமைதியை உண்டாக்கி ஆன்மாவிற்கு எழுச்சியை உண்டுபண்ணுகின்றன. உலகியலில் சாதி, சமயம், குலம் கோத்திரம், ஏழை, வசதியானவன் போன்ற இருமை நெறிகளில் உழன்று தடுமாறும் மனிதர்கள் மனத்தில் உள்ள அழுக்கை நீக்கி ஆண்டவனுக்கு இடமளித்தால் மனம் நெறிப்பட்டு ஆன்மா உய்வுபெறும். நெஞ்சமாகிய கல்லை நெகிழ்ந்துருக வைத்தால் ஆன்மாவில் அமுதத்தை அனுபவிக்கலாம் என்பது ஆன்றோர் கண்டு அனுபவித்த உண்மை.

ஊனில் வாழ் உயிரே! நல்லைபோ
உன்னைப் பெற்று
வானுளார் பெருமான் மதுசூதன்
என் அம்மான்
தானும் யானும் எல்லாம் தன்
னுள்ளே கலந்தொழிந்தோம்
தேனும் பாலும் நெய்யும் கன்னலும்
அமுதும் ஒத்தே'

என்று நம்மாழ்வார் தனது அனுபவ நிலையை எடுத்துக் காட்டுகின்றார். ஆசாபாசங்களுக்கும் அழுக்குகளுக்கும் மனத்தில் இடமளிக்காமல் அது ஆண்டவன் உறையும் இடம் என்ற எண்ணத்தோடு பேணிக்காத்தால் பரம்பொருள் எவ்விதத் தங்குதடையுமின்றி நம் உளக்கோயிலில் எழுந்தருளுவான். பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரிபூரண ஆனந்த சொரூபமான இறைவன் தன்னருளால் விரும்பி உறையுமிடம் அடியவர்களின் இதயங்கள்தாம்.

'இரும்புதரு மனத்தேனை யீர்த்து
ஈர்த்துஎன் என்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினை
யுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே
நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவாறு அன்றே
யுன் பேரருளே'

என்பது மாணிக்கவாசகரின் திருவாசகம்.

இறைவன் கனியைவிடவும், கரும்பைவிடவும், பாவையையும் விடவும், அரசனைவிடவும் இனியவன் என்று அனுபவித்த பெரியோர் எடுத்தியம்புகின்றனர். "தினைப்புனத்தினுள் தினைக்க திரைப் பறவைகளும் விலங்குகளும் வந்து அழித்திடாமல் காக்கின்ற பேதைப் பெண்ணான வள்ளியம்மையாரின் தனங்களை விரும்பிய குமாரக் கடவுளை உண்மையான அன்பினால் மெள்ள மெள்ளப் பயின்று சிந்தனை செய்ய, அப்பொழுது உண்டாகும் ஒப்பற்ற இன்பத்தை அனுபவித்து அறிந்த அப்போதே அந்த இன்பத்திற்கு முன் தேனும் புளித்து கசந்துவிட்டது" என்று அருணகிரி நாதர் கந்தர் அலங்காரத்தில் கூறுகின்றார். திருமங்கையாழ்வாரும் பெரிய திருமொழியில், "இரும்பானது காய்ந்து அக்காய்ச்சல் அடங்கும்படி குடித்த தண்ணீர் போல் பகவானிடம் என்னால் பெற அரிய அன்பைச் செலுத்தி அடிமையாக்கிக் கடைத் தேறி விட்டேன். அன்றியும் அடியவர்கள் இருக்குமிடம் தேடி வருகின்ற (மழைக் காலத்து) மேகம் போன்ற கருநிறத்தை உடையவனைச் சேர்ந்த, என் மனத்தில் பொருந்த வைத்து, கரும்பினுடைய இனிய ரசம்போல் அனுபவிக்கப் பெற்ற எனக்கு இனிமையாக இருந்தபடிதான் என்னே!" என்று உருகுகின்றார்.

டாக்டர். ஆர். கோபாலகிருஷ்ணன்,
எம்.ஏ. பி.எச்டி.
சென்னை-5.

இறையருளை இன்புற்றுக்களித்த அடியவர்கள் கூடத் தம் மனம் மீண்டும் இரும்பாகிவிடக்கூடாது என்பதில் கவனமாயிருப்பர். 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்ற நிலையில் வாழ விழையும் அருளாளர்கள் தம்மை முழுதும் காக்கத் திருவருளையே நாடுவர். அருட்பிரகாச வள்ளலாரும்,

'இரும்புநேர் மனத்தென் பிழை
யெலாம் பொறுத்தென்
இதயத்தி லெழுந்திருந் தருளி
விரும்புமெய்ப் பொருளாந் தன்னிய
லெனக்கு
விளங்கிட விளக்கியுட் கலந்தே
கரும்புமுக் கனியா லமுதொடு
செழுந்தேன்
கலந்தென வினிக்கின்றோய்
பொதுவில்
அரும்பெருஞ் ஜோதி யப்பனே
யுளத்தே
யடைத்தரு ளென்மொழி யிதுவே'

என்று விண்ணப்பிக்கின்றார்.

"காந்தக்கல் இரும்பைத் தன்வசம் இழுக்கின்ற இயற்கைத் தன்மை போன்று அடியேனை மீண்டும் பிறப்

(28ம் பக்கம் பார்க்க)

# வைணவ வினா - விடை

வித்வான ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ் தாதாசார்யா.

வைகானஸ ஆகமமானது ஸ்ரீமந்நாராயணனால் சதுர்முகப்ரமனுக்கு நேரில் உபதேசிக்கப்பட்டது. இவரைத்தான் ஸ்காந்தம், விகனஸர் என்றது. இவரே திருமால் திருமார்பிலிருந்து தோன்றியவர்."பத்மபூ: பரமோ தாதா, தஸ்மிந் நாராயண த்ரயம்!"என்பது ஸ்காந்தச் செய்யுள். உக்தவான் நிகமார்த்தானும் 'ஆசாரம் ப்ரவிபாகச':

ஆனந்த ஸம்ஹிதை என்னும் நூல்,
வேதாநாம், வ்யஸநாத்யந்து ப்ராக்ருபம்
மிளிதம்மஹத் |
தாந்து வைகானஸீம் சாகாம் யஜுர்வேத தரோர்
விது:||

என்கிறது. இதன்படிக்கு வியாஸ பகவான், மூல வேதங்களை 4 ஆக பிரிக்கும் முன்பேயே, இந்த ஆகமம் உண்டாயிற்று என்பதாகும். விகனஸ முனிவரான பிரமன் ஒரு முனிவராகி, ஒரு முகத்துடன், நைமிசாரணியம் என்ற புனிதத் தலத்தில், இந்த ஆகமம்பற்றிய சிறப்பையும், மூலமந்திரம் என்ற நாரயண மந்திரம் பற்றியும், தமது அணுக்கச் சீடர்களான பிருகு, மரீசி, அத்ரி, காசியபர் என்பவர்களுக்கு உபதேசித்தார். இந்த ஆகமம், முதன் முதலில் 1½ கோடி செய்யுள்கள் கொண்டதாக இருந்தது. பின்புதான், விகனஸ முனிவருடைய சீடர்களால் 4 லக்ஷம் செய்யுட்களாகக் குறைக்கப்பட்டது. ஸ்ரீபாகவதத்தில் (11-5) விகனஸர் பற்றிக் கூறுகையில் "க்ருதே சுக்ல சதுர்பாஹு: ஜடிலோ வல்கலாம்பர: க்ருஷ்ணாஜிநோபவீதாக்ஷான் பிப்ரத்தண்டகமண்டலு:! தஸ்ய மானஸபுத்ர: விகனஸ: " என்று சொல்லப்பட்டது.

வைகானஸ ஆகமம், வேத நெறியை மிகவும் நெருக்கமாகப் பின்பற்றும். மந்த்ரம், ஆகமம், தந்த்ரம், தந்த்ராந்த்ரம் என நான்கு பிரிவு கொண்ட ஆகமப் பகுதியில் வைகானஸத்துக்கு மந்த்ரபாகம் அதிகம். வைகானஸ ஆகமம், உருவ வழிபாட்டின் சிறப்பையும் நன்கு பேசும். ஸ்ரீமந்நராயணனை வழிபட்டு வந்தால், பிறவிப்பிணியைப் போக்கும், மோக்ஷம் பெறுவது உறுதி எனவும் கூறும்.

திருமாலுக்கு மூர்த்தி அமைப்பதற்கும் வாகனங்கள் நிர்மாணம் செய்வதற்கும் அங்குலக்கணக்குகள் வைகானஸத்தில் மாத்ராங்குளம், மானங்குளம், தேஹலப்தாங்குளம் என மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மூலபிம்பம் 4 வகை. சிலாபிம்பம் அதாவது துருவபேரத்தில் அழகாக, அளவுக்குத்தக்கபடி, சீரான அங்கங்கள் அமைப்பது, சிலாபிம்பத்தில் 1 அங்குலத்திற்குக் குறைவாக அங்கங்களைச் செதுக்கி, அதன் மேல் சிப்பி, சுண்ணும்பு போன்ற மிருதுவான பண்படுத்தப்பட்ட சுண்ணும்பைக் குறைவுக்கு நிரப்பி வர்ணம் பூசி வழிபடுவது முதலியன கூறப்பட்டுள்ளன.இந்த மூல பிம்பத்தை ஸௌதம் என்பர். தாரு பிம்பத்திற்குப் பெரும்பாலும் அத்திமரம் சிறந்தது. நல்ல சத்துள்ள அதாவது வைரம்பாய்ந்த அத்திமரத்தால் வடிவம் அமைத்து, அதன்மேல் இலேசான துணியைச்சுற்றி, அதன் மேல் வர்ணம் பூசுவர். இதனை ஒரே மரத்தாலும் செய்யலாம் அல்லது இடுப்புவரை ஒரே பாகமாகவும் செய்யலாம் எனவும் கூறப்பட்டுள்ளது. இதில் சுதைக்கு வேலை கிடையாது. மரபிம்பத்தைத் இரு மரத்துண்டுகளாலும் செய்யலாம். ஆனால் ஒரே ஜாதி மரமாகத்தான் இருக்கவேண்டும் என்பது மிக முக்கியம் என்று வைகானஸம் உரைக்கும். அடுத்து மூலபிம்பம். எட்டு வித மண்களாலும், பல பச்சிலைச் சாற்றினால் அரைக்கப்பட்ட சுண்ணும்பினாலும், சுக்கு, திப்பிலி முதலிய மருந்து சரக்கினாலும், அஷ்டபந்தனம் என்ற கூட்டுமருந்தாலும் நிர்மாணம் செய்து எலும்பு, நரம்பு, சதை, ஊன், மாமிசம், ரத்தம், தோல் என்ற 7 விதம் அமையும்படி அமைக்கலாம் என்பதும் வைகானஸக் கருத்து.வைகானஸக் கொள்கையைப் பின்பற்றுபவர்களே வைகானஸர்கள் என்பார்கள். விகனஸருடைய ஸூத்ரங்கள், 11 பிரச்னங்களையும் 8 மந்திரங்களையும் உடையன. பூஜையில் ப்ரக்ரியை அதிகம் இருக்கும். கருவறையில் உள்ள மூலம், யாகம், ஸ்னனம், சயனம், உத்ஸவர் என்ற 5 பேரங்கள் இங்கும் உண்டு. அர்ச்சை பிம்பங்களில் யோகம் போகம், வீரம், ஆபிசாரிகம் என 4 வகைகள் உண்டு. ஆபிசாரிகத்தைக் காரியம் முடிந்ததும், ஆற்றில் கரைத்து விடுவதுண்டு.

கோசர்மமாத்ர மாலிப்ய, கோமயேன ச பூதலம் |
ஆலயே லபதே ஸத்ய:, கோப்ரதானபலம் நர: ||
ஸ்ரஜம் பத்வா ஸுமனஸாம் ய: ப்ரயச்சதி
விஷ்ணவே |
ஸ புக்த்வா, விபுலான், போகான்,
நாகப் ருஷ்டே விராஜதே ||

என்றபடி. திருமால் ஆலயங்களை மாட்டின் உடல் தோல் அளவு, அதாவது சுமார் 5 அடிகள் பசுஞ்

சாணத்தால் சுத்தம் செய்வதும், திருமாலுக்குப் பூமாலை கட்டித் தருவதும் அக்ஷய பலத்துடன், மோக்ஷத்தையும் தரும். கருட புராணத்தில் வரும் மூர்த்தா மூர்த்த கண்டத்தின் விளக்கத்தால், விஷ்ணுசாளக்கிராமம் அர்ச்சையில் ஒருவகை எனவும், அது 23 வகை எனவும் கூறுவதை வைகானஸமும் ஏற்கும். 12 ஸாளக்கிராமங்களைச் சேர்த்து ஒரு க்ஷேத்ரம் என்பர். திருமால் ஆலயங்களில் உள்ள நாச்சியார்கள் லயார்ச்சை, போகார்ச்சை, அதிகாரார்ச்சை என மூவகைப்படுவர். லயார்ச்சை என்பது திருமால் திருமார்பில் வீற்றிருக்கும் திருமகள். போகார்ச்சை என்பது திருமாலுக்கு இருபக்கங்களிலும் உபயநாச்சிமார்களாக எழுந்தருளியிருப்பது. அதிகாரார்ச்சை என்பது தனியான ஸந்நிதியில், தன் ஆராதனங்களுடன் எழுந்தருளி இருக்கும் திருமகளாகும். "தவளதராம் சுக கந்தமால்ய சோபே" என்ற ஸ்ரீ சூக்தம் உரைத்தவகையில், திருமகளுக்கு வெளுப்பான நறுமணமுள்ள மலர்களையே சமர்ப்பிக்கவேண்டும். "அதோ யத் தாரு ப்லவதே" என்ற ருக்வேத மந்திரத்தினுல் என்றும் மூலபிம்பம் குறிப்பிட்ட மரத்தினில் அமைப்பது விசேஷம் என்பது ஒரு சிலர் கருத்து. மூலபிம்பம் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அடிபீடம் அசையாமலும், பழுதுபடாமலும் நிலைத்திருக்கவேண்டும். ஐடிபந்தனம் மிகவும் கவனத்துடன் செய்தால் மூலபிம்பத்தில் அருட்சக்தி தேக்கி வைக்கப்பட்டு உத்ஸவ பிம்பத்தின் மூலம் அந்த அருட்சக்தி பரப்பப்படும். அது கெடாமல் இருக்க மந்த்ர தந்த்ர பூஜைகள் சரிவரச் செய்தும், மூலபிம்பத்துக்குத் தைலக்காப்பு, புனுகுச்சட்டம், இவைகளைச் சாற்றவேண்டும் எனவும் கூறப்பட்டுள்ளது. புனுகுச்சட்டம் மூலபிம்பத்தில் உரைக்கும் வரை, அம் மூலபிம்பத்தின் அருட்சக்தி அடர்த்தியாக ஆவிபோல் வெளிவருமானதால், 3 அல்லது 5 நாட்களுக்குப் பொதுமக்கள் மூலபிம்பத்தின் அருகே செல்லாமலும் இருப்பர். தைலத்தை இலேசாக மூலபிம்பத்தில் சேர்த்து உடனே அந்தத் திவ்யவடிவத்தில் ஆடை முதலானவைகளை அலங்கரிக்கும்படியாய் சந்தனத் தைலத்துடன் கலந்த புனுகுச்சட்டத்தையும் பிம்பத்தின் மேல் பூசலாம். இதுபற்றி இன்று வைகானஸ ஆகம விதானப்படி ஆராதனுதிகள் நடக்கும் திருமலையில் வைகானஸ ஆகம முறைகளைக் கேட்டும் அறியலாம்.

விஷ்ணு தர்மம் கூறுவது:'நியமத்துடன், சில்பசாஸ்திர நுணுக்கங்களை நன்கு அறிந்த, மிக்க அனுபவமுள்ள, கைராசியுள்ள சிற்ப சாஸ்திர வல்லுநர்கள் ஒரு மண்டல நியமத்துடன் இருந்து, அந்தந்த திருமால் வடிவங்களுக்குள்ள மந்த்ராதீன ப்ராசீனத் தியான சுலோகங்களை ஆவ்ருத்தி செய்து கொண்டு, தியானத்தின் முடிவில், அவர்களின் மனக்கண் முன், தியான ஸமாதியில் தோன்றும் திவ்யமங்கள விக்ரகத்தின் உருவ அமைப்பில் விக்கிரங்களை அமைப்பார்கள்.' வைணவ ஆகமங்களுக்கு வியூகத்தில் நோக்கு அதிகமானதினுல் திருமால் ஆலயங்களில் பள்ளி கொண்ட கோலமுள்ள எம்பெருமான்களையும் அமைப்பதுண்டு. மேலும் நூல் வழியிலும், அனுபவரீதியிலும், ஸம்பிரதாய வழக்கிலும், வைகானஸ ஆகமத்தின் சிறப்பு அளவு கடந்தது. பாஞ்சராத்திரம், வைகானஸம் இவ்விரண்டிற்கும் முரண்பாடு கிடையாது. மனிதனுக்கு இரண்டு கண்கள் கொண்ட ஒரு நோக்குபோல் இவை ஒன்றே என்பதை ஸ்ரீசுவாமி தேசிகன் பாஞ்சராத்திர சிக்ஷையில் மிக அருமையாக விளக்கி அருளியுள்ளார். (தொடரும்)



(26-ம் பக்கத் தொடர்ச்சி)

பிளை நோக்காவண்ணம் கருப்பஞ்சாற்றினும் இனியதான நின் திருவடியினைத் தந்தருளி விழிநீர் பொழிதல் மெய்ந்நடுங்கல் முதலாகிய அன்பு இன்ப அடையாளம் அடியேன் பால் உண்டாகச் செய்தருள்வாயாக. அடியேனுக்குத் தாயொப்பாகிய தனி முதல் தலைவனே" என்று தாயுமானுர் இரும்பையும் கரும்பையும் குறிப்பிடுகின்றுர்.

'கரும்பரங்கு தண்டுழாய் துதைந்
தலர்ந்த பாதமே
விரும்பி நின்றிறைஞ்சு வேற்கு இரங்
கரங்கவாணனே
கரும்பிருந்த கட்டியே கடற்கிடந்த
கண்ணனே,
இரும்பரங்க வெஞ்சரந் துரந்த வில்லி
ராமனே.

என்று திருச்சந்த விருத்தத்தில் திருமழிசைப்பிரான் திருவாய் மலர்ந்தருளுகின்றுர்.

அலைக்கழிக்கப்படும் ஆன்மாக்களுக்கு அடைக்கலம் அளிப்பதற்காக அலைகடலில் துயிலும் பெருமான் அர்ச்சாவதாரமாக ஆலயங்களில் எழுந்தருளி அருள்பாலிக்கின்றுர். கோவிலில் குடிகொண்ட பெருமானின் திருமேனியே பொன்மேனியாகிக் கரும்பாக இனிக்கின்றது. மனித மனமும் புனிதமானது; ஆலயத்தின் பரம்பொருள் எழுந்தருளியிருக்கும் இடமும் புனிதமானது. அண்டத்திலுள்ள இறையை பிண்டத்தில் உணர வேண்டுமாயின் மனம் வாக்கு மெய் ஆகியவற்றைப் புனிதப்படுத்தி உணர வேண்டும். திருமாலையில் தொண்டரடிப் பொடியாழ்வார் இக்கருத்தைத் தெளிவாக விளக்குகின்றுர்:

விரும்பிநின்றேத்த மாட்டேன் விதி
யிலேன் மதியொன்றில்லை
இரும்புபோல் வலியநெஞ்சம் இறை
யுருகும் வண்ணம்
சுரும்பமர் சோலைசூழ்ந்த அரங்கமா
கோயில்கொண்ட
கரும்பினைக் கண்டுகொண்டு என்கண்
ணிணை களிக்குமாறே. ★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

**ச்ரத்தாத்ரய விபாக யோகம்**
அத்தியாயம் — 17
பகுதி — 9

யுத்து ப்ரத்யுபகாரார்த்தம்
பலமுத்திச்ய வா புன: |
தியதே ச பரிக்லிஷ்டம்
தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ||
(17-21)

'கைம்மாறு கருதியோ அல்லது பலனை உத்தேசித்தோ வருத்தத்துடன் வழங்கப்படும் தானம் ராஜஸமென்று வழங்கப்படுகிறது'.

அநியாய வழியில் பொருளீட்டு பவர்களில் சிலர் அந்தணர்கள், சந்யாசிகள் மற்றும் பொதுமக்களுக்குத் தானம் செய்ய முன் வருவர். குறிப்பாக இத்தகையவர்கள் சாது, மகாத்மாக்களைத் தங்கள் வீடுகளில் தடபுடலாக விருந்து வைத்து உபசரிப்பர். வெளியில் பார்ப்பவர்களுக்கு இவர்கள் தர்ம சீலர்கள் போலவும், கொடையாளிகள் போலவும் தோன்றும். ஆனால் அவர்களது அந்தரங்க எண்ணம் வேறு தாங்கள் பொருளீட்டுவது அநியாய வழி என்பதும் அதனால் தங்களது பாப மூட்டை கூடுகிறது என்பதும் அவர்களுக்கு நன்கு தெரியும். அத்தகைய பாபத்திற்குப் பிராயச்சித்தமாக இத்தகைய தானச் செயல்களை அவர்கள் கருதுகின்றனர். இது ராஜஸிக தானம் ஆகிறது.

எதையும் எதிர்பாராது கொடுப்பதுவே சிறந்த தானம். எதையாவது திரும்ப எதிர்பார்த்தால் அது பண்டமாற்று முறையிலமையும் வியாபாரமாய் விடுகிறது. வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியக்கூடாது என்பதுவே உயர்ந்த கோட்பாடாகும். ரிஷிகேசத்தில் உள்ள சிவானந்தா சிரமத்திற்குச் சென்றவர்கள் சாத்விக தானத்தின் இலக்கணத்தை ஸ்ரீ சுவாமி சிவானந்தரிடம் கண்டிருப்பர். வந்தவர்களுக்கெல்லாம் அவரது திருக்கரங்கள் அரிய நூல்களையும், திவ்விய சிவானந்தாசிரம மருந்துகளையும் வாரி வாரி வழங்கிக் கொண்டேயிருக்கும். பிறருக்குக் கொடுப்பதில் உண்மையான ஆனந்தத்தை கண்டவர் அவர். இதனால் கவியோகி சுத்தானந்த பாரதி அவர்கள் ஓர் இடத்தில் சுவாமிஜியை அன்புடன் 'கிவ் ஆனந்தர்' என்றே குறிப்பிடுகிறார்.

ராஜஸ சுபாவம் உடையவனுக்குப் பொருளைக் கொடுக்க மனமில்லை. எனவே, 'ஏதோ தானம் செய்தால் புண்ணியம் கிடைக்கும் என்று சொல்கிறார்களே, அதற்காகச் செய்வோம்', என்ற நோக்கத்துடன் அரைகுறை மனத்துடன் வருத்தப்பட்டுக் கொண்டே வேண்டா வெறுப்புடன் கொடுக்கிறான். தான் செய்யும் ஒரு மடங்குத் தானத்திற்குத் தனக்குப் பத்து மடங்கு திரும்பக் கிடைக்க வேண்டுமென்று அவன் மனதினுள் விருப்பம் கொள்கிறான். இத்தகைய தானத்தினால் கொடுப்பவர், ஏற்பவர் இருவருக்கும் மனவருத்தம் உண்டாகிறது.

கோவில்களில் நாம் ஒலிபெருக்கி அமைப்புகள், குழாய் விளக்குகள் மற்றும் கதவு, சட்டம், விட்டம், மணி போன்ற அனைத்துப் பொருள்களிலும் இன்னார் உபயம் என்று கொட்டை எழுத்துக்களில் எழுதப்பட்டிருப்பதைக் காணலாம். அர்ச்சனை பண்ணும் பொழுதும்கூட இன்ன நபர் பெயருக்கு இன்ன நட்சத்திற்கு என்று அர்ச்சனை செய்வதைக் காண்கிறோம். இதெல்லாம் பலனை எதிர்பார்த்துச் செய்யப்படும் செயல்கள் ஆனதால் இவை ரஜோ குணத்தின் பால்-அமைகின்றன. தானம்செய்து விட்டு பத்திரிகைகளில் தனது படத்துடன் பெரிய விளம்பரம் மற்றும் செய்திகள் வர வேண்டுமென்று இத்தகையவன் எதிர்பார்க்கிறான்.

இனி அடுத்த சுலோகத்தில் தாமஸ குணத்துதித்த தானம் பற்றிய விளக்கம் வருகிறது.

அதேசகாலே யத்தான
மபாத்ரேப்யஸ்ச தீயதே |
அஸத்க்ருதமவக்ஞாதம்
தத்தாமஸமுதாஹ்ருதம் || (17-22)

'தகாத இடத்திலும், காலத்திலும் தகுதியற்றவர்களுக்கு வணக்கமின்றி இகழ்ச்சியுடன் செய்யப்படும் தானம் எதுவோ, அது தாமஸமெனப்படுகிறது.'

இந்த சுலோகத்தில் அதேசம், அகாலம், அபாத்ரம், அஸத்க்ருதம், அவக்ஞாதம் என்று எதிரிடைச் சொற்களாகத் தொகுத்து போடப்பட்டிருக்கின்றன. எனவே இவையெல்லாம் செய்யத் தகாதவை என்று பொருள்படுகின்றன.

அதேசம் - தகாத இடம்
அகாலம் - தகாத காலம்
அபாத்ரம் - தகாத பாத்திரம் அல்லது நபர்
அஸத்க்ருதம் - வணக்கமில்லாதது
அவக்ஞாதம் - இகழ்ச்சியுடன் கூடியது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
M.S.c., M.Phil.,
ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

தாமஸ தானம் என்பதற்கு விளக்க மாக இந்த ஐந்து வார்த்தைகளும் அமைகின்றன.

எங்கே புனிதமும், தூய்மையும் இல்லையோ எங்கே வசிக்க இயலாதோ அது 'அதேசம்' அல்லது தகாத இட மாகிறது. உறங்கும் வேளை, வேறு அலுவல்களைக் கவனித்துக் கொண் டிருக்கும் வேளை, உடல் உபாதியுறும் வேளைகள் ' ஆகியவை அகாலமா கிறது. குடிகாரர்கள், கொள் ளைக்காரர்கள், கெட்ட நடத் தையுடையவர்கள் போன்றவர்கள் தகாத பாத்திரங்கள் ஆகின்றனர். பணத்தை வீண் விரயம் செய்பவர் களும், பொது நலத்தொண்டில் நாட் டம் இல்லாது சுயநலமே மிகுந்து காணப்படுபவர்களும் அபாத்திரர்கள் ஆகின்றனர்.

தானம் கொடுக்கும்போது தான் பணக்காரன் என்ற இறுமாப்புடன் கூட கடுகடு என்ற முகத்துடன், தானம் பெறுபவர்கள் ஓட்டாண்டி கள், பரம்பரைப் பிச்சைக்காரர்கள் என்ற ஏளன மனோ பாவத்துடன் கொடுப்பது தானத்தின் நோக்கத் தையே கெடுத்துவிடுகிறது. சிலர் தானம் செய்கையில், பொருளைக் கொடுக்கும் அதே வேளையில் ஏசிக் கொண்டே கொடுப்பர். இதனால் பெறுபவர்களின் மனம் புண்ணாவது மட்டுமன்றி அவர்கள் நாணத்தால் கூனிக் குறுகிப் போய்விடுவர்.

இன்று நம் நாட்டில் அரசாங்க அலுவலகங்கள் மற்றும் பொது இடங் களில் லஞ்சமும், ஊழலும் தாண்டவ மாடுகின்றன. ஆலயங்களில் இறை வனது சன்னிதானத்தில்கூட கியூவில் நிற்காது விரைவில் இறைவனின் தரி சனத்தைப் பெற வேண்டும் என்பதற் காக லஞ்சம் கொடுக்கவும் அதை வாங்கவும் அநேகர் தயாராயிருக் கின்றனர் என்றால் நிலைமையை என் னென்று சொல்ல?

செய்யும் யக்ஞம் தானம் மற்றும் தவக்காரியங்களில் குற்றம் வராமல் காப்பது எப்படி என்ற கேள்விக்கு அடுத்த சுலோகத்தில் விடை வரு கிறது.

ஓம் தத் ஸதிதி நிர்தேசோ
ப்ரஹ்மணஸ்த்ரிவித: ஸ்ம்ருத: |
ப்ராஹ்மணாஸ்தேன வேதாஸ்ச
யக்ஞாஸ்ச விஹிதா: புரா || (17-23)

'ஓம் தத் ஸத்' என்று பிரம்மம் மூவகையிலும் பகரப்பட்டுள்ளது.அதி லிருந்து வேதியர், வேதம், வேள்வி முன்பு படைக்கப்பட்டுள்ளன.'

அனைத்திலும் பெரியது, அனைத் தையும் விளக்குவது எதுவோ அதுவே பிரம்மம். இது வார்த்தைக்கும், சிந்தனைக்கும் அப்பாற்பட்டது. 'அநிர் வசனீயம்', 'வாசாமகோசரம்' என்ற சொற்றொடர்கள் பிரம்மம் வார்த் தைகளால் விளக்கப்பட முடியாதது என்பதைக் குறிப்பிடுகின்றன.

எனினும் நமக்குப் புரிய வைப்ப தற்காக, ஓம், தத், ஸத் என்ற மூன்று குறிப்புப் பெயர்களால் பிரம்மம் அழைக்கப்படுகிறது. பிரபஞ்சம் முழுவதும் நாதத்திலிருந்து வந்திருக் கிறது. நாதத்திற்கெல்லாம் அடிப் படையாக பிரணவ மந்திரமான ஓம் விளங்குகிறது. இதுவே மூல மந்திரம், ஏகாக்ஷர மந்திரம். எனவே இது நாதப் பிரம்மம் என்று அழைக்கப் படுகிறது. ஓசையின் மொத்தத் தொகை ஓம்கார ரூபத்தில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அதை விளக்கும் வகையில்தான் விநாயகரது உருவமே ஓம்கார ரூபத்தில் திகழ்கிறது. எனவே பிரம்மத்தின் விளக்கமாக ஓம் அமை கிறது.

மதிப்பு மிக்க பெரியோரை பொது வாக நாம் பெயர் சொல்லி அழைப் பது கிடையாது. உதாரணமாக கற் புடைய பெண் ஒருத்தி தனது கண வனைக் குறிப்பிடுகையில் அவரது பெயரைச் சொல்லாமல், 'அவர்' என்றே குறிப்பிடுவாள். அதுபோல ஞானிகள் பிரம்மத்தைப் பற்றிக் குறிப்பிடும் போதெல்லாம் 'அது' என்றே குறிப்பிடுவது வழக்கம். 'பிரம்மம்' என்ற வார்த்தையே 'பிரு ஹத்' அல்லது பெரியது என்று பொருள் படுகிறது. கீதை 'மஹதோ மஹீயான்' - பெரிதினும் பெரியது என்று பிரம்மத்தைக் குறிப்பிடுகிறது. பெரிய பொருளைப் பெயரிட்டு அழைக் காமல் 'தத்' என்ற பதத்தால் வேதம் அழைக்கிறது. (தொடரும்)



ஸ்ரீ மயூரநாதர் - ஸ்ரீ அபயாம்பிகை திருமணக்கோலம்.
திரு. எஸ். வி. ரமணி - மயிலாடுதுறை.

# தானமும் தர்மமும்

உலகில் ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து வாழுமாறு கடவுள் நம்மைப் படைத்திருக்கிருர். இதை நாம் உணராததாலே பல சிக்கலான பிரச்சனைகள் உருவெடுக்கின்றன.

'அறம் செய விரும்பு' என்ருர் ஔவைப் பிராட்டி. அறம் செய்ய முடியாதவர்களும் அறம் செய்ய விரும்பினுல் நல்லது. தானம் என்பது கேட்காமலேயே தருவது. தர்மம் என்பது கேட்ட பிறகே தருவது. இதில் தானமே சிறந்தது.

ஆதிகாலத்தில் அரசர்கள் யாகம் செய்வார்கள். யாகத்திற்கு வந்தவர்களுக்கெல்லாம் பொன்னும், பொருளும் அரசன் கொடுப்பான். இதற்குப் பெயர் தானம். ஏழைகளுக்கும், நலிந்தோர்க்கும், திருப்பணிகளுக்கும் கேட்காமலே கொடுக்கும் தானம் மிகச் சிறந்த பலனை அளிக்கும். ஔவை பிராட்டி சொன்னது போல தான, தர்மம் செய்ய நினைத்தாலே, விரும்பினுலே பெரும் புண்ணியம் உண்டாகும் என்பதை விளக்கும் சம்பவம் ஒன்றைப் பார்ப்போம்.

ஓர் ஊரில் பிரபல ஜோதிடன் ஒருவன் இருந்தான். அந்த ஜோதிடன் ஜோதிடம் சொன்னுல் அப்படியே நடக்கும். அவ்வளவு நிபுணன் ஜோதிடத்தில். இதை அறிந்த ஒருவன் தன் குடும்ப வாழ்க்கை எப்படி இருக்கும் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பி அந்த ஜோதிடனிடம் சென்ருன். ஜோதிடன் அவனுடைய ஜோதிடத்தை கணித்துப் பார்த்ததில் அவன் வாழ்வு அன்று இரவே முடிவதாய் இருந்தது. இதை நம் வாயால் ஏன் சொல்ல வேண்டும் என்ற கருத்தில் நாளை காலையில் வா பார்க்கலாம் என்று சொல்லிவிட்டார் ஜோதிடர். ஜோதிடம் பார்க்க வந்தவன் தன் வீடு திரும்புகையில் பட்டம் பட்டமாக மழை பெய்யத் தொடங்கியது. வழியில் இருந்த கோயில் மண்டபத்தில் ஒதுங்கி நின்ருன். மண்டபம் பாழடைந்து இருந்ததால் மழை நீர் ஒழுகியது. அந்த கணநேரத்தில் அவன் மனதில் ஒரு எண்ணம் பளிச்சிட்டது. நம்மிடத்தில் செல்வம் இருந்தால் இந்த கோயிலையும், மண்டபத்தையும் மிக நேர்த்தியாகப் புதுப்பிக்கலாமே என்று எண்ணினுன். அடுத்த விநாடி ஒரு மின்னல் பளிச்சென்று மின்னியது. அவன் தலைக்கு நேரே ஒரு நாகப் பாம்பு தொங்கிக் கொண்டு இருந்தது தெரிய வந்தது. தப்பித்தால் போதும் என்று மண்டபத்தை விட்டு வெளியே ஓடினுன். அந்த விநாடியே மண்டபம் இடிந்து விழுந்தது. வீடு திரும்பிய அவன் தன் மனைவியிடம் நடந்ததைக் கூறினுன். மறுநாள் காலையில் ஜோதிடன் கூறியபடியே வந்து சேர்ந்தான். ஜோதிடனுக்கு ஒன்றும் புரியவில்லை. தலையைப் பிய்த்துக் கொள்கிருன். ஜோதிட நிகண்டுகளையும், இன்னும் பிற ஜோதிடக் கருவிகளையும் கிழித்துப் போட எத்தனிக்கிருன். அந்நேரத்தில் ஜோதிடனின் மனைவியானவள் அவனருகில் வந்து விஷயத்தை வினவ இவன் ஆயுள் நேற்று இரவோடு முடிந்து விடுவதாக ஜோதிடம் கூறுகிறது. இவன் இன்னும் உயிருடன் உள்ளதால் என்னுடைய ஜோதிடம் பொய்யாகி விட்டதெனப் புலம்பினுன். அதற்கு அவன் மனைவி 'எப்படி ஆயுள் முடிவதற்கு ஜோதிட நிகண்டில் குறிப்புள்ளதோ அது போல ஆயுள் வளரவும் குறிப்பிருக்கும் தேடிப் பாருங்கள்' என்று கூற நிகண்டுகளை எல்லாம் தேடிப்பார்த்ததில் ஒருவன் மரணத்திலிருந்து தப்ப வேண்டுமானுல் ஆலயம் அமைத்து கும்பாபிஷேகம் செய்கின்ற அளவிற்கு புண்ணியம் செய்திருக்க வேண்டும் என்று குறிப்பிட்டிருந்தது.

ஜோதிடன் ஜோதிடம் பார்க்க வந்தவரை நேற்று இரவிலிருந்து என்ன நல்ல காரியம் செய்தாய் என்று வினவ அதற்கு, முன்னுள் இரவு நடந்த நிகழ்ச்சியை விளக்கமாகச் சொன்னுன்.

என்னிடம் செல்வம் இருந்தால் கோயிலையும், மண்டபத்தையும் புதுப்பித்துக் கும்பாபிஷேகம் செய்வேன் என்ற எண்ணமே ஒருவன் உயிரைக் காப்பாற்றியது என்று சொன்னுல் அதைச் செயலில் செய்தால் எவ்வளவு நற்பயன் உண்டாகும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

---

தெள்ளாறு G. இராமநாதன் B.A.,

---

தானம் கொடுக்கும்போது சலிப்போ, அருவருப்போ, கோபமோ கொள்ளக்கூடாது. முழுமனதுடன் மகிழ்ச்சி பொங்க தானம் தர வேண்டும்.

நசிகேதஸ் தந்தை யாகத்தின் முடிவில் கிழட்டுப் பசுக்களையும், மலட்டுப் பசுக்களையும் தானமாகக் கொடுத்தார். இது தானமாகாது. ஏனெனில் பிறர்க்குப் பயன்படுபவனவாகவும், பிறர்க்குப் பஞ்சமான பொருள் எதுவோ அதை உண்மையான மனதுடன் தருவதே தானம்.

ஐரோப்பாவில் ஒரு கிராமமே மூடுபனியில் மூழ்கி விட்டது. பல ஆயிரக்கணக்கான பேர் பாதிக்கப்பட்டனர். பாதிக்கப்பட்ட மக்களுக்காக அமெரிக்காவிலிருந்த பள்ளிக்கூட மாணவன் ஒருவன் தன் தாயாரிடம் சென்று நான் சேர்த்து வைத்துள்ள ரூபாய் 250ஐ பாதிக்கப்

பட்ட மக்களுக்கு அனுப்பட்டுமா என்று வினவினன். அதற்கு அந்த தாயார் கோபமடைந்து பள்ளிக்கூட நிர்வாகிகளை டெலிபோனில் கூப்பிட்டு "மூடுபனியால் பாதிக்கப் பட்ட மக்களுக்கு ரூபாய் அனுப்பட்டுமா? என்று என்மகன் கேட்கிறான். அனுப்பிவிட்டு வந்தேன் என்று அல்லவா கூற வேண்டும்" என்று கண்டித் தாராம். இவ்வாறு பாதிக்கப்பட்டவர்களுக்கும், ஏழைகளுக்கும் வலிய உதவுவதே தானம்.

தானம் செய்வதில் சிறப்பான தானம் எவருக்கும் தெரியாமல் செய்யும் தானம்தான்.

ஒரு மயில் மழையில் நனைகிறது என்று தன் பட்டுப் போர்வையையே அந்த மயிலுக்குப் போர்த்தினன் பேகன் என்னும் அரசன். முல்லைக் கொடி படர கொம்பு இல்லாமல் தத்தளிப்பதைப் பார்த்து தன் தேரையே முல்லைக்கொடி படர தந்து விட்டான் பாரிவள்ளல். இப்படிப் பட்டவர்களை எண்ணும்போது மனம் நெகிழ்கிறது.

பரிசளிப்பு விழா ஒன்றிற்கு ஒரு மில் முதலாளியின் மகள் கலந்து கொண்டு பரிசு வழங்குவதாக ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஒரு பெரியவர் பரிசுப் பொருள்களை எடுத்துக் கொடுத்துக் கொண்டேயிருந்தார். மில் முதலாளியின் மகள் அதை இடது கையால் வாங்கி, வலது கையால் பரிசு வழங்கிக் கொண்டிருந்தார். அந்தப் பெரியவருக்குச் சற்றுக் கோபம் — நம்மிடமிருந்து அலட்சியமாக இடது கையாலே வாங்குகிறாளே என்று — முடிவில் கேட்டும் விட்டார். அதற்கு அந்த அம்மையார் வலது கை கொடுப்பதற்காக மட்டுமே உள்ளது. வாங்குவதற்காக அல்ல என்று நறுக்கென்று கூறி விட்டார்.

இதுபோல் வலது கை கொடுப்பதை இடது கைக்கு தெரியக்கூடாது என்ற அளவில் கொடுப்பது தர்மம். சிலர்பெயருக்காக,புகழுக்காக,பதவிக்காக, பட்டத்திற்காக, விளம்பரத்திற்காக தர்மம் செய்வார்கள். இந்த தர்மத்தால் பயன் ஏதுமில்லை.



குடந்தை மகாமகத் திருவிழா.
ஸ்ரீ சாரங்கபாணி ஸ்வாமியும், கோமளவல்லித் தாயாரும்.
திரு. வி. எஸ். ஸ்ரீநிவாசன்—தஞ்சை.

பலனை எதிர்பாராமல் நல்ல பணிகளுக்கும், ஏழைகளுக்கும், நோயாளிகளுக்கும் தர்மம் செய்ய வேண்டும். தனது வருமானத்தில் ஆறில் ஒரு பங்கு அல்லது பத்தில் ஒரு பங்கு தான தர்மங்களுக்காக ஒதுக்க வேண்டும்.

ஒருவன் தனது செல்வத்தைச் சேர்த்து வைக்க சிறந்த இடம் ஏழைகளின் பசித்த வயிறே என்று ஒரு செய்யுள் கூறுகிறது.

தான தர்மத்தாலே உலகில் பல இயக்கங்கள் நடைபெற்று வருகின்றன. தான தர்மத்தில் சிறந்து விளங்கினால் ஒரு நாடு சிறப்புறும். இளம் குழந்தைகளுக்குத் தான தர்மம் செய்யும் பழக்கத்தை உண்டுபண்ண குழந்தைகள் கையில் கொடுத்து தர்மம் செய்யும் பழக்கத்தை வளர்க்க வேண்டும்.

செத்தும் கொடுத்தான் சீதக்காதி என்பார்கள். அப்படிப்பட்ட பண்பு மலர வேண்டும். ஏழைகளுக்கும், நலிந்தோர்க்கும் பலனை எதிர்பாராமல் செய்யும் தர்மமே புனிதமானது.

"யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்குமாம் பசுவிற்கொரு வாயுரை
யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே"

என்பது திருமூலர் வாக்கு.

"அறத்தான் வருவதே இன்பம் மற்
றெல்லாம் புறத்த புகழுமில"
என்பது குறள்.

எனவே நாமும் நம் வாழ்க்கையில் தினமும் நம்மால் இயன்ற அளவு பிறர்க்குத் தர்மம் செய்யும் பணியை மேற்கொள்ள உறுதி கொள்வோமாக.

⁘

# வால்மீகி திருவுள்ள விளக்கு

இனி இரண்டாம் காரணம் கூறப்படுகிறது. 'ஸுரேச ப்ரஹ்மேசா நாத்யமர்த்யை : தசரத யஜநே ஸங்கதை : வந்திதத்வாத்' என்பதே அது. தசரதனென்னும் அரசனுடைய புத்ரகாமேஷ்டி என்ற யாகத்தில் (யாகசாலையில், அக்நியில் சேர்க்கும் தங்களுடைய ஹவிஸ்ஸின் பகுதிகளைப் பெற்றுக் கொள்வதற்காக) ஒன்று சேர்ந்த தேவேந்திரன் பிரமன் சிவன் முதலான தேவர்களால் வணங்கப்பட்ட படியினுல் என்பது இதன் பொருள். வந்திதத்வாத்—வதி—அபிவாதந ஸ்துத்யோ : என்னும் தாது(=வினையடி) வணங்குதல் துதித்தல் ஆகிய இரண்டு பொருளிலும் வருமாயினும், மேலே 'தைரேவ அபிஷ்டுதத்வாத் (= அத்தேவர்களாலேயே

தமிழாக்கம் :

**திரு தி. அ. கிருஷ்ணமாசாரியர்,**
*சிரோமணி வித்வான்*
*திருப்பதி*

துதிக்கப்பட்டபடியினுல்) என்று துதித்தலைத் தனியே எடுத்திருப்பதனுல் இங்கு வணங்குதலென்னும் பொருள் மட்டும் கருதப்பட்டது. இதனுல் நான்முகன் சிவன் தேவேந்திரன் முதலிய எல்லாத்தேவராலும் வணங்கப்பட்டபடியினுல் என்பது காரணமென்று தேறியது.

இது அங்கேயே (ராமா—பால—16-17) 'தேவர்கள் ராவணனிடமிருந்து தமக்கு ரக்ஷணத்தை விரும்பியபோது, பேரொளி படைத்தவரும் சங்கு சக்கர கதைகளைத் திருக்கைகளில் ஏந்தியவரும் பீதாம்பரமணிந்தவரும் உலகத்திற்குத் தலைவருமான விஷ்ணுவானவர் வைகுந்தத்திலிருந்து அவர்களருகில் வந்தார். வந்து அச்சபையில் நான்முகனேடு கூடித் தாம் செய்யவேண்டிய காரியத்தில் மனமூன்றியவராய் இருந்தார். தேவர்கள் அனைவரும் மிக வணங்கித் துதித்து இவ்வாறு கூறினர்' என்று கூறப்பட்டுள்ளது.

இங்கு, 'தேவர்கள் அனைவரும் அவரை வணங்கித் துதித்து இங்ஙனம் கூறினர்' (17) என்று பொதுவாகக் கூறியுள்ளதனுல், பிரமன், சிவன், இந்திரன் என்றிவர்கள் வணங்கினமை பெறப்படவில்லையாயினும், 'அவ்வேள்வியில் தேவர்கள் கந்தர்வர்கள் ஸித்தர்கள் பரமருஷிகள் ஆகியோர் அந்த யாக சபையில், தத்தம் அவிப்பகுதிகளைப் பெறுவதற்காகத் திரண்டனர் (4) என்று வேள்விஅவிப் பகுதியைப் பெற்றுக் கொள்வதற்காக வந்தவர்களாக முதல் முதலில் சொல்லப்பட்ட தேவர்கள் அனைவருமே, 'அந்தச் சபையில் எல்லாத் தேவரும் முறைப்படி உலகத்தைப் படைக்கும் பிரமதேவனிடம் பெரியதொரு பயனைப் பற்றிய வார்த்தையைக் கூறினர்' (5) என்று நான்முகக் கடவுளிடம் இராவணன் அழிவதோர் உபாயத்தை வேண்டினமை அறியப்படுவதனுலும், அவர்களில் சிவபெருமானும் சேர்ந்திருந்தமை தெரிவதனுலும், தேவர் திரளால் பிரார்த்திக்கப்பட்ட நாராயண பகவான் அவர்களுக்கு அபயமளிக்கும் போது 'இங்ஙனம் வேண்டப்பட்டவரும் நித்ய ஸூரிகளை ஆளுமவரும் தேவர்கள் தலைவரும் எல்லோராலும் வணங்கப்பட்டவருமான விஷ்ணுவானவர் சரணுகதியென்னும் தர்மத்துடன் சேர்ந்து ஒன்றுகத் திரண்ட எல்லாத் தேவர்களைக் குறித்தும் கூறினர்' (26) என்று நான்முகனும் சேர்ந்தமை பெறப்படுவதனுலும், பகவான் தானே ராவணனை வதம் செய்வதாக வாக்களித்த போது 'திருமால் தசரதனைத் தனக்குத் தகப்பனுக விரும்பிய பின்பு தேவர்களும் கந்தர்வர்களும் உருத்திரனும் அப்ஸரஸ்ஸுக்களின் கூட்டங்களும் பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தைப் பற்றிய துதிகளாலே மதுஸூதநனைத் துதி செய்தனர்'(31) என்று ராவணவதத்தைப் பற்றி வாக்களித்தனுல் மிக மகிழ்ந்து பகவானைத் துதி செய்தவர்களில் உருத்திரனும் சேர்ந்துள்ளமை கூறப்படுவதனுலும், முன்பு விண்ணப்பம் செய்யும் போதும் அவ்வுருத்திரப் பெருமான் விண்ணப்பம் செய்யும் தேவர்திரளின் நடுவில் சேர்ந்தமை அறியப்படுதலினுலும், பிரமன் சிவன் இந்திரன் ஆகியவர்களும் பகவானை வணங்கினமை பெறப்பட்டதேயாகுமாதலால்,'தசரதனுடைய யாகத்தில் ஒன்று சேர்ந்த இந்திரன் பிரமன் ஈசன் முதலிய தேவர்களால் வணங்கப்பட்டபடியினுல்' என்று காரணம் கூறியது மிகவும் பொருந்தும்.

இக்காரணமானது பிரமன் சிவன முதலியவர்களைவிட விஷ்ணுக்கு உயர்த்தியைச் சாதித்துக் கொடுத்து உண்மையில் அப்பெருமானுக்கு எல்லாவற்றினும் உயர்த்தியைச் சாதித்துத் தருகிறது. அதைச் சிறிது காண்போம். எல்லாவற்றினும் உயர்த்தியாவது - எல்லா ஜீவ - ஜடப் பொருள்களைக் காட்டிலும் உயர்ந்தவனுயிருக்கும் தன்மையன்றே? அவற்றுள் ஜடங்களை விட ஜீவர்களுக்கு உள்ள உயர்த்தி அனைவரும் இசைந்

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

ததேயாகும். தேவர் மனிதர் விலங்கு முதலிய வேறுபாடு கொண்ட ஜீவர்களிலும் விலங்கு முதலியவற்றைவிட மனிதர்க்கும்,அவர்களைவிடத்தேவர்க்கும் மிகவுயர்த்தி உண்டென்பதில் யாருக்கும் விவாதம் இல்லை. தேவர்களுக்குள்ளும் அக்நி யமன் முதலியோரை விடத் தேவேந்திரனுக்கும் அவனைவிடப் பிரமன் விஷ்ணு உருத்திரன் என்கிற மும்மூர்த்திகளுக்குமுள்ள உத்தமத்தன்மையிலும் யாருக்கும் மாறுபட்ட கருத்துஇல்லை. அம்மூவரில் யார் உயர்ந்தவரென்னும் விஷயத்தில் மட்டும் கருத்தில் மாறுபாடு உள்ளது. அதுதன்னில் கீழே காட்டியபடி பிரமன் உருத்திரன் இவர்களைக் காட்டிலும் விஷ்ணுவுக்கு உயர்த்தி ஸித்தித்தால், எல்லாப் பொருள்களை விட உயர்த்தியும் ஸித்தித்ததேயாகும். இவ்விதமாக எல்லாத் தேவ கணங்களை விட மிகவுயர்ந்தவர்களான ப்ரஹ்ம ருத்திரர்களால் வணங்கப்பட்டமை என்னும் இக்காரணமானது தானே விஷ்ணுவுக்கு எல்லாப் பொருள்களைவிட மேம்பட்டிருத்தலையே ஸாதித்துத் தருமென்பதாயிற்று.

இனி மூன்றும் காரணம் 'தைரேவ அபிஷ்டுதத்வாத்' என்று கூறப்படுகிறது. தை: ஏவ = முற்கூறப்பட்ட பிரமன் சிவன் இந்திரன் முதலிய தேவர்களாலேயே,அபிஷ்டுதத்வாத் = நன்ருகத் துதிக்கப்பட்டபடியினலே. ப்ரஹ்ம ருத்ராதி ஸர்வதேவ கணங்களாலும் ஸ்தோத்ரம் செய்யப்பட்டபடியினல் என்பது தேர்ந்த பொருள். இக்காரணமும் முற்கூறிய காரணங்கள் போலவே திருமாலுக்கு எல்லோரைவிடப் பரத்துவத்தை(=முழுமுதற் கடவுளாந் தன்மையை) நிலை நாட்டுகின்றது.

பாலகாண்டம் பதினைந்தாம் ஸர்க்கத்தில் (17) 'எல்லாத் தேவர்களும் அவ்விஷ்ணுவை வணங்கித் துதித்துக் கூறினர்' என்று தேவர்கள் அனைவரும் திருமாலைத் துதிசெய்தமை கூறப்பட்டுள்ளது. ஸமபிஷ்டூய என்று அங்குள்ள சொல்லுக்கு, நன்ருகத் துதித்து என்று பொருள். துதிக்கு நன்மையாவது — பக்தியை முன்னிடுதலாகும். நிறைந்த பக்தியுடன் ஸ்தோத்ரம் செய்து என்க. அல்லது நன்மையாவது — இயற்கையாக உள்ள குணங்களைக் கூறுந் தன்மையாகும். மற்ற தேவர்களைப் பற்றிய ஸ்தோத்ரமானது — அவர்களிடம் இல்லாமல் பிறரிடம் உள்ள குணங்களை ஏறிட்டுச் சொல்லுதலாகையாலும், திருமாலைப் பற்றிய ஸ்தோத்ரமானது அப்பெருமானிடம் உண்மையாக உள்ள குணங்களைஉள்ளபடியே சொல்லுகையாகையாலும் அத்துதிகள் இரண்டின் வாசி அறியத்தக்கது.

இனி நான்காம் காரணம்—சரணவரணத: என்பது. சரண(தஞ்ச)மென்று வரித்தலே சரணவரணமாகும். அதாவது நீயே உபாயமாக வேணுமென்று பற்றுதல் என்றபடி. முன்புள்ள—தை: என்பது இங்கும் சேருகிறது. தை: சரணவரணத:= அந்தப் பிரமன் சிவன் முதலியோர்களால் தஞ்சமாகப் பற்றப்பட்டபடியினல் என்பது தேறிய பொருள்.சரணமென்ற சொல் வீடு முதலிய பிற பொருள்களையும் குறிக்கும் சொல்லாயினும், அதிகமான பிரசித்தியிருப்பதனல் உபாயத்தைக் குறித்தல் அதற்கு முக்கியமான தன்மையாகும். அல்லது அது பல பொருளுடையதாயிருந்தாலும் அதற்கு இங்கு உபாயமென்ற பொருளிலேயே நோக்கு உள்ளமையினல் அப்பொருளே அறியப்படும்.

அதே காண்டத்தில் அதே சருக்கத்தில் (21-24) திருமாலைக்குறித்து 'ராவணனென்னும் மூர்க்கனை அந்த அரக்கன் தேவர் கந்தருவர் ஸித்தர் முனிச்ரேஷ்டர்கள் ஆகியோரை பராக்கிரமச் செருக்கினல் வருத்துகின்ருன். ருஷிகளும் நந்தனவனத்தில் விளையாடுகின்ற கந்தருவரும் அப்ரஸரஸ்ஸுக்களும் அக்கொடியவனலே ஹிம்ஸிக்கப்பட்டனர். ஆகையால் ஸித்த கந்தர்வ யக்ஷர்களும் நாங்களும் இங்குவந்து, அவனை நீர் வதம் செய்யும் பொருட்டு உம்


## திருப்பதியில்
## தங்கு வசதி காட்டேஜுகளின் கட்டண விவரங்கள்
(நாள் ஒன்றுக்கு)

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா தர்ம சத்திரம் :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளைக்கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 20-00 |
| நான்கு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 25-00 |
| ஒரு படுக்கையும், மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 15-00 |

**ஸ்ரீ பத்மாவதி விருந்தினர் விடுதி :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளையும், குளிர்ச்சாதனம், மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 50-00 |
| ஒரு படுக்கையும் குளிர்ச்சாதனம் மற்றும் மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 30-00 |

**ஸ்ரீ வேங்கடேஸ்வரா விருந்தினர் விடுதி :**

| | | |
|---|---|---|
| இரண்டு படுக்கைகளைக் கொண்டு மேசை நாற்காலி வசதிகளைக் கொண்ட அறை | ரூ. | 20-00 |

மைச் சரணமாக அடைந்தோம் என்று தேவர்கள் கூறிய வார்த்தை காணத்தக்கது.

இங்கு ராவணனுடைய வதத்தை விரும்பிய தேவர்கள் அவ்வதத்திற்காகத் திருமாலைத் தஞ்சமடைந்தமை கூறப்பட்டதல்லவா?

கேள்வி

ஐயா, 'யாவனொருவன் ப்ரஹ்மாவை முன்பு உண்டாக்கினானோ' யாவனொருவன் அவனுக்கு வேதங்களைத் தந்தானோ, தன்னைப் பற்றிய அறிவின் தெளிவைத் தருகின்ற அந்தத் தேவனை மோக்ஷத்தில் விருப்பம் கொண்ட நான் சரணமாக அடைகின்றேன்' (ச்வேதாச்வ-6-18) என்று சொல்லப்பட்டு, வீடுபேற்றைப் பயனாகக் கொண்ட சரணாகதியும், இந்தப் பரமாத்மா கேவல ச்ரவணமநந நிதித்யாஸனங்களால் (= ஆசார்யர்களிடம் பரமாத்மாவைப் பற்றிக் கேட்டறிவது, அதனை யுக்திகளைக் கொண்டு ஆராய்ந்து நிச்சயிப்பது நிச்சயித்தபடியே த்யானம் செய்வது ஆகிய இவற்றால் மட்டும்) அடையத் தக்கவன் அல்லன். பின்னையோவெனில், இந்தப் பரமாத்மா எந்த ஜீவாத்மாவை வரிக்கிறானோ (=விரும்புகிறானோ) அவனாலேயே இப்பரமாத்மா அடையத்தக்கவன். அவனுக்கு இப்பரமாத்மா தன் ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துகிறான் (=தன்னுடைய அனுபவமாகிற மோக்ஷஸுகத்தைத் தருகிறான்) (கடோ 1-2-23, முண்டகோ 3-2-3) என்றிது முதலிய சுருதிகளிலும் மற்றுள்ள ஸ்ம்ருதிகளிலும் கூறப்பட்ட மோக்ஷோபாயத்வமும் திருமாலுக்கே உரியவையாக இருந்த போதிலும், வேறொரு பயனைக் கருதி அதன்கண் ஆசையுள்ளவன் செய்யும் சரணாகதியும் வேறு பயனைக் குறித்து உபாயமாந் தன்மையும் திருமாலைத் தவிர வேறு தேவதைகளிடத்திலும் உண்டு. ஆகையால்தான் 'உபபத்தே: ச' (3-2-34) என்ற ப்ரஹ்ம ஸூத்ரத்தினால் திருமாலுக்கு மோக்ஷோபாயத்வமே தனித்தன்மையாக வருணிக்கப்பட்டது. தேவர்கள் செய்த இச் சரணாகதியோ மோக்ஷத்தைப் பயனாகக் கொண்டதல்லாமல் ராவண வதத்தை மட்டும் பயனாகக் கொண்டது. இங்குச் சொல்லப்படும் உபாயத்வமோ மோக்ஷோபாயத்வமல்லாமல் ராவணவதத்தைக் குறித்த உபாயமாந்தன்மையேயாகும். ஆகையால் இவை பகவானுக்கே உரியவையல்ல. (அப்படி உரியனவாயிருந்தாலன்றோ இந்தச் சரணாகதி ராமபிரானைப் பரப்ரஹ்மமாகக் காட்டித்தர முடியும்) என்று இங்கு ஒரு கேள்வி எழுகின்றது.

விடை

இதற்கு விடை வருமாறு: பிரமன் சிவன் முதலிய எல்லாத் தேவராலும் செய்யப்பட்டதாய், வேறு தேவதைகளால் செய்ய முடியாத ராவண வதத்தைப் பயனாகவுடையதுமான சரணாகதியும் விஷ்ணுவுக்குப் பரத்வத்தை (எல்லாரையும்விட உயர்த்தியை) ஸாதித்தே தீரும். சரணாகதி செய்தவனைவிட சரணாகதி செய்யப்பட்டவனுக்கு உள்ள உயர்த்தியை அனைவரும் இசைந்திருப்பதனாலும், இங்கு எல்லாத் தேவர்களும் சரணாகதி செய்தவர்களாகையால் சரணாகதி செய்யப்பட்ட பகவானுக்கு எல்லாத் தேவர்களைக் காட்டிலும் உள்ள உயர்த்தி முற்கூறியபடி எல்லாப் பொருள்களைக் காட்டிலும் உயர்த்தியாகவே முடியும்.

இங்குக் கூறப்படுகின்ற சரணாகதியானது, 'பின்பு தேவரும் கந்தருவரும் ஸித்தரும் பரமரிஷிகளும் யாகத்தில் முறைப்படி தத்தம் ஹவிர்ப் பாகத்தைப் பெற்றுக் கொள்வதற்காக வந்து சேர்ந்தனர்' (பால 15-4) என்று ஆரம்பத்தில் அவிப்பகுதியைப் பெற்றுக்கொள்வதற்காக வந்தவர்களாகச் சொல்லப்பட்ட தேவர்கள் அனைவரும் செய்த சரணாகதியேயாகும். 'தேவர்கள் அனைவரும் துதித்து வணங்கி அவ் விஷ்ணுவைக் குறித்துக் கூறினர்' (பால கீ5—17) என்று பகவானிடம் நமஸ்கரித்து வேண்டிக் கொண்டதாக வருணிக்கப் பட்டதனாலும், நடுவில் 'அவ்விராவணனை வதை செய்வதற்காக—முனிவர்களுடன் கூடிய நாகங்களும் ஸித்த—கந்தர்வ—யக்ஷர்களும் வந்தோம். வந்து உன்னைச் சரணமடைந்தோம்' (பால 15-23) என்றுள்ள தேவர்களின் வார்த்தைக்குப் பிறகு, 'இங்ஙனம் வேண்டப்பட்டவரும் நித்யஸூரிகளை ஆளுமவரும் தேவர்கள் தலைவரும் எல்லோராலும் வணங்கப்பட்டவருமான விஷ்ணு அனைவரையும் குறித்து இங்ஙனம் கூறினர்' (15—25, 26) என்று பகவான் பிரமாதிகளைக் குறித்து விடையளித்ததாகக் கூறியுள்ளதாலும், கடைசியில் 'பின்பு தேவர்களும் கந்தருவர்களும் உருத்திரர்களும் அப்ஸரஸ்ஸுக் கூட்டங்களும் பகவானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தைப் பற்றிய துதிகளாலே மதுஸூதனனைத் துதித்தனர்' (பால 15-31) என்று ராவணனை வதம் செய்வதாக பகவான் பிரதிக்ஞை செய்ததற்கு மகிழ்ந்த ருத்திரரோடு கூடிய தேவர் பகவானைத் துதித்தமை கூறப்பட்டதனாலும் இச்சரணாகதி ப்ரஹ்மருத்ராதி ஸகல தேவர்களும் செய்ததென்பது அறியப்படுகிறது.

இராவணனை வதம் செய்வதென்னும் பயனானது வேறு தேவதைகளால் முடியாத காரிய மென்னும் விஷயமும் 'விஷ்ணுவே, மற்ற தேவர்களால் கொல்ல முடியாத ராவணனை யுத்தத்தில் கொல்லக் கடவீர்' (பால 15-21)என்னும் தேவர்களின் வார்த்தையால் அறியப்பட்டது. அதனால் தான்'பகைவரைத் தபிக்கும் தேவனே எமக்கெல்லோர்க்கும் நீயே எல்லையான கதி' (மிகமிக உயர்ந்த தஞ்சம்) (பால 15-24)என்று எல்லாத்தேவர்க்கும் பகவானே உபாயமென்று கூறியது பொருந்துகிறது.

(தொடரும்)

# திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

# நன்கொடைத் திட்டத்தின் கீழ் குடில்கள்

திருமலையில் யாத்திரிகர்களின் நலனுக்காக நன்கொடைத் தொகைகளின் மூலம் பல தங்குவசதிகளான குடில்கள், அறைத்தொகுதிகள், சத்திரங்கள், விருந்தினர் விடுதிகள் போன்றவற்றைக் கட்டுவதற்குப் பொது மக்களிடமிருந்து தேவஸ்தான மேலாண்மை நன்கொடைகள் பல பெற்று வருகின்றது. இத்திட்டத்தின் விவரங்கள் பின் வருமாறு:

## கருடாத்ரி நகர் குடில்கள் திட்டம்

இத்திட்டத்தின்கீழ் ஒவ்வொன்றும் 4 அறைத் தொகுதிகளைக் கொண்டு விளங்கும்படியான 18 குடில்கள் கட்டிடத்தின் அடித்தளத்திலும், முதல் தளத்திலும் கட்டப்படும்.

* பொதுத் தாழ்வாரம் மற்றும் குளியலறை இணைப்பு வசதியுடன் கூடிய 10×12 அடி பரப்பளவு கொண்ட அறையும் உள்ளதாக ஒவ்வொரு அறைத்தொகுதியும் விளங்கும்.

* ரூ. 30,000 வழங்கும் நன்கொடையாளரின் பெயரில் 320 சதுர அடி கட்டிட பரப்பளவு கொண்டதாக இவ்அறைத்தொகுதி விளங்கும். நன்கொடையாளர் விரும்பி, 8 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 2. 4 இலட்சமும், 4 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 1.2 இலட்சமும், 2 அறைத் தொகுதிகளைக் கொண்ட ஒரு தனிக்குடிலுக்கு ரூ. 60,000-ம் வழங்கினால், அவை கட்டித் தரப்படும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதி திட்டம்

கோயிலுக்கு வடகிழக்குப் பக்கத்தில் இந்த விருந்தினர் விடுதி கட்டப்படும். இவ்விடுதி மூன்று தளங்களையும், ஒவ்வொரு தளமும் 50 அறைத் தொகுதிகளையும், ஒவ்வொரு அறைத்தொகுதியும் 600 சதுர அடி கட்டிடப் பரப்பளவில் விளங்கும்படியாக 14×18அடி என்ற பரப்பளவில் உள்ள அறைகளையும் கொண்டு விளங்கும். மேலும் ஒரு பொதுத் தாழ்வாரமும் கொண்டு விளங்கும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதிக்கும் நன்கொடையாளர் ரூ. 60,000 வழங்கவேண்டும்.

## ஸப்தகிரி தர்மசாலை

ரூ. 8.5 கோடி செலவில் "ஸப்தகிரி சத்திரங்கள்" எனும் பெயரில் இம்மாபெரும் திட்டம் மேற்கொள்ளப்படும். ஒவ்வொரு அறைத்தொகுதியும் ரூ. 80,000/- செலவில் கட்டப்படும்.

ஆகும் செலவில் ரூ. 40,000/- நன்கொடையாளர் வழங்கினால், அவ்வறைத்தொகுதி அவருடைய பெயரில் அமையும்.

## பலன்கள்

நன்கொடையாளர்கள் வருடத்தில் 60 நாட்களுக்கு இலவசமாக அவருடைய நன்கொடை அறைத் தொகுதியில் அல்லது குடிலில் தங்கலாம். ஆனால் இந்தச்சலுகை நிறுவனங்களுக்கும், வாணிகக் கழகங்களுக்கும் 15 வருடங்களுக்கு மட்டுமே அளிக்கப்படும்.

* இத் தங்குவசதி ஒதுக்கீடுகளின் போது நன்கொடையாளர்களின் உற்றார் உறவினர்களுக்கு முன்னுரிமை வழங்கப்படும்.

* ஒவ்வொரு அறைத்தொகுதி அல்லது குடிலிலும் சம்பந்தப்பட்ட நன்கொடையாளர்களின் பெயர்ப் பலகைகள் நிரந்தரமாகப் பொருத்தப்படும்.

மேற்படி திட்டங்களில் பங்கேற்க விரும்பும் நன்கொடையாளர்கள் அதற்கான தொகையினைச் "செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி." எனும் பெயரில் காசோலை மூலமாகப் பெற்று, தேவையான தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் இணைத்து அவற்றை, "தலைமை கணக்கு அலுவலர் தி. தி. தேவஸ்தானம் திருப்பதி" எனும் முகவரிக்கு அனுப்புதல் வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு "செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

செயலாட்சித் தலைவர்.

" தரும் பொருள் சிறிதே; பெறும் அருள் பெரிதே "

இறைவன் மானிடர்களைப் போற்றத்தக்க 'ஒன்றை' அருளி உயர்த்தி விட்டான். நாம் செய்யும் காரியங்களில் நல்லது இன்னது: தீயது இன்னது; இக்காரியத்தை செய்தால் நன்மையே பயக்கும்; இக்காரியத்தை செய்தால் தீமையேதான் பயக்கும் என்பதை உணரும் கருவி ஒன்றை நமக்கே அளித்து விட்டான். அதுவே மனம் என்பது.நாம் செய்கின்ற செயல்கள் 100க்கு 90 சதவீதம் நம் மனத்திற்கு தெரிந்து செய்கின்ற காரியங்களே. ஒரு சில காரியங்களே மனம் அறியாது செய்யப்படுகின்ற காரியங்களாகும்.

தீயில் போட்ட அடுப்புக்கரி தானே தீயாவது போன்று இறைவனிடம் நம் மனதை கொடுத்து விட்டால் அது இறைவன் சொரூபம் ஆகிவிடும். இதை தாயுமானவர்,

சிந்தை பிறந்ததும் அங்கே — அந்தச்
சிந்தை இறந்து தெளிந்ததும் ஆங்கே
எந்த நிலைகளும் ஆங்கே — கண்ட
யான்தான் இரண்டற்று இருந்ததும்
ஆங்கே

என்கிறார்.

தாயுமானவர் மிகச் சுலபமாக இறைவனிடம் மனதை அளித்து விடும்படி கூறினாலும் அது ஆகின்ற காரியமில்லை! ஏனெனில் மனம், அதன் பிற நிலைகளாகிய நெஞ்சம், உள்ளம், சிந்தை, சித்தம், அகம், இதயம் போன்றவைகளுடன் தொடர்பு கொண்டு இருக்கிறது.

மனதை மாசற்றதாக்கிக் கொள்ளல் வேண்டுமாம். மாசற்ற மனதை இறைவன் குடியிருக்கும் கோயிலாக மாறும். இறைவனையே நினைந்து, அவன் திருநாமம் ஓயாது செப்புகின்ற முயற்சியுடன், நம் பணியை மேற்கொண்டால் பிறவிப் பயன் கிட்டும்.

மனதை நிலை நிறுத்தி, இறைவனையே நினைந்து இராமல் மணிக் கணக்காக செய்கின்ற பூஜைகள் பலன் தராது என்கிறார் தியாகராஜர். ஏனெனில் நம் மனத்தில் உள்ள மர்மங்களை அப்படியே அறிய வல்லான் இறைவன் ஒருவனே. எனவே ஒருவன் உயர்வடைய ஏணிப்படியாக உள்ளது மனமே. உயரச் செல்வற்கு ஏதுவான இப்படிகளை பார்த்து ஏறுவிட்டால் நம் இறுதியினை நாமே தேடிக் கொள்பவராகிறோம்.

சமைத்துச்சுவைத்துஉண்டு மகிழப் பயன்படுவது நெருப்பு. எத்தனையோ உயிர்களை அறுவை சிகிச்சை மூலம் காப்பாற்ற ஏதுவாகும் கருவி கூரியக் கத்தி. உடலினுள் மறைந்து நிற்கும் வியாதியை காணப் பயன்படும் கதிர்களை—அளிப்பது மின்சாரம். இவைகளைக் கொண்டே தீமையை விளைவித்து விலங்கினும் கீழான நிலையினை அடைந்தால் அந்நிலையினை என்னவென்பது?

" மனப்பரிப் போடழுக்கு மானிட சாதி
யிற்றுன் பிறந்து"

என்று வருந்திக் குறிப்பிடுகிறார் ஆழ்வார்.

# மனம்

யானையை அசைய விடாது சங்கிலியால் பிணைத்துக்கட்டிப் போட்டாலுங்கூட அதன் துதிக்கை அசைந்து கொண்டுத்தான் இருக்கும். அது போன்று நாம் எவ்வளவுதான் எச்சரிக்கையாக இருந்தாலும் நம்மையும் மீறித்தப்பி ஓட முயலும் தன்மையுடையது நம் மனம். அத்தகைய நில்லா மனதை இறைவன் பால் திருப்புவதே பக்தர் நோக்கமாக இருக்க வேண்டும்.

" பரவு மனமுடைப் பக்தர்"

என்கிறது திவ்விய பிரபந்தம். இறைவனருளை வேண்டுதலைவிட இன்பம் அளிக்கக் கூடிய செயல் வேறேதும் இருக்க முடியாது. எனவே 'பரவுதல் என்பது மனத்தின் சிறந்த தன்மையாகும்.

வலிமைகளில் சிறந்தது மன வலிமையே. மன வலிமையற்றவர்களால் எத்தகு காரியத்தையும் திறம்பட செய்ய இயலாது. இதை திருவள்ளுவர்,

" எண்ணிய எண்ணியாங் கெய்துப;
எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" என்கிறார்.

கதவுகள் அடைக்கப்பட்டிருக்கும் அறையினுள் உள்ள பொருள்கள் பாதுகாப்பாக இருக்கும். கதவுகள் திறந்து கிடந்தால் கண்டவரெல்லாம் உட்புகுவர். களவு போக வாய்ப்பு உண்டு. மனமும் அப்படித்தான். அது முறைப்படி பயன்படுத்தப்படாவிட்டால் நம்முடைய அறிவை பாழ்படுத்தித் தீரா பழிகளைச் சேர்த்து விடும்.

சிலருடைய மனமானது அலை மோதிக் கொண்டே இருக்கும். நிலைத்து நிற்காது. அத்தகைய மனத்தால் விளைவன எல்லாம் தீமையே.

" தம்மையே பற்று மனம்"
" நில்லா மனமுய் நில்லா எமக்கது
தன்றுறே"

என்ற பாசுர வரிகள் இதை நன்கு விளக்கிக் காட்டுகின்றன.

குழைதல், நினைதல், உருகுதல், சிந்தித்தல், இரங்குதல், புலம்புதல், களித்தல், தொழுதல், மகிழ்தல் ஆகியவை மனத்தின் வேறு தன்மைகளாகும்.

நினைத்தல் என்பது மனத்தற்கே உரியது. இத்தன்மையினைப் பற்றிக் கூறுத பக்தி இலக்கியங்களே இல்லை எனலாம். இறைவனை நினைக்கவும் தீயன, நன்மை பயப்பன என்று நினைத்துப் பகுப்புதற்கும், கடந்த கால நிகழ்ச்சிகளை நினைத்துப் பார்ப்பதன் மூலம் எதிர்காலத்தை நன்கு அமைத்துக் கொள்ளவும் மனமே உதவுகிறது.

செல்வி. எம். கலா
வேலூர்,

# திருமலை திருப்பதி தேவஸ்தானம்

# ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்

இவ்வுலகில் ஏழைகளுக்கு உணவு இடுதலைவிட வேறு எந்தவிதமான தர்மமும் சிறந்தது இல்லை. அதிலும் திருவேங்கடவன் குடி கொண்டிருக்கும் திருமலையில் யாத்திரிகளுக்கு இலவசமாக உணவு வழங்குதல் மிகவும் அருளுடையது. இவ்வகையில் தி.தி. தேவஸ்தானம், திருமலைக்கு வரும் பக்தர்களுக்கு இலவசமாக "முழுச் சாப்பாடு" அளிக்கும் வகையில் "ஸ்ரீ வேங்கடேஸ்வரா நித்ய அன்னதான திட்டம்" ஒன்றினை செயற்படுத்தியுள்ளது.

## திட்டம் எப்படி வேலை செய்கிறது

* தேவஸ்தானத்திற்கு ரூ. 10 இலட்சம் அல்லது அதுபோன்று பல மடங்கு நன்கொடை அளிக்கவேண்டும். தி.தி.தே. அத்தொகைக்கு ஈடான தன் பங்கினைச் செலுத்தும். மொத்தத்தொகைக்கு வரும் வட்டித் தொகையிலிருந்து நாள்தோறும் 500 யாத்திரிகர்களுக்கு உணவு வழங்கப்படும்.
* நன்கொடைகள் யாவும் தனிமனிதர்கள், சிறு கழகங்கள், தனியார் நிறுவனங்கள் ஆகியோரிடமிருந்து பெறப்படும்.
* உணவு அருந்தும் கூடத்தில் நன்கொடையாளர்களின் பெயர் முக்கிய இடத்தில் வைக்கப்படும்.

## பயன்களும் உதவிகளும்

* வருடத்தில் மூன்று நாட்களின்போது திருமலையில் நன்கொடையாளர் தன் குடும்பத்தாருடன் இலவசமாகத் தங்கவும், மேலும் அவர்களுக்கு ஹாரத்தியுடன் இலவச தரிசன வசதியும் செய்து தரப்படும்.
* எண் 80 (ஜி) பிரிவின்கீழ் நன்கொடையாளர்கள் வருமான வரிவிலக்குப் பெறுவார்கள்.
* நாள்தோறும் நடைபெறும் இறைவனின் கொலுவு சேவையின்போது நன்கொடையாளரின் பெயரும் கோத்ரமும் வாசிக்கப்படும்.
* இத்திட்டப்பணியினை மேற்பார்வையிடும்வகையில், ஆலோசனைக்குழுவின் உறுப்பினர்களாக நன்கொடையாளர்கள் சேர்க்கப்படுவர்.

இதுவரை கீழ்வரும் நபர்கள் இத்திட்டத்திற்கு நன்கொடை அளித்துள்ளனர்.

1. திரு. எல். வி. ராமய்யா - சென்னை. ரூ. 10 இலட்சம்
2. திரு. மன்சிங்கா - பம்பாய். ரூ. 20 இலட்சம்
3. திரு. ஆர். பி. கோயங்கா - கல்கத்தா ரூ. 10 இலட்சம்
4. திரு. ஈஸ்வர் பிரஸாத் பொத்தார் - கல்கத்தா. ரூ. 10 இலட்சம்
5. திரு. தீருபாய் எச். அம்பானி - ரிலையன்ஸ் டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரீஸ் - பம்பாய் ரூ. 10 இலட்சம்

மேலும் பல பக்தர்கள் பயன் பெற தாராளமாக உதவுங்கள்.

மேலும் தகுந்த விவரங்களுக்கு :

செயலாட்சித்தலைவர், தி. தி. தேவஸ்தானம், திருப்பதி - 517501. ஆந்திர மாநிலம்.

**செயலாட்சித்தலைவர்.**

ஆறும் அறிவிற்கு விளக்கம் கூற முற்படும் தொல்காப்பியர், ஐந்தறிவுடன் மனம் சேர்வதேயாகும். அந்நிலையே மனித நிலை எனக் கூறிப் போந்தார். எனவே அறிவும் மனமும் ஒன்றே.

படித்துப் பட்டங்கள் பல பெற்றுலும் பலருக்குத் தீமை விளைவித்து அறிவால் மட்டுமே உயர்ந்து இருப்பவர் உளர்.

அரம்போலும் கூர்மைய ரேனும்
மரம் போல்வர்
மக்கட் பண் பில்லாதவர்'

என்று கூறுகிறுர் வள்ளுவர்.

பாத்திரங்களில் களிம்பு சேர்ந்து அதன் தன்மைக்குக் கேடு பயப்பது போன்று மனத்தில் மாசுக்கள் சேர்கின்றன. ஈயம் பூசுவதன் மூலம் களிம்பு அகற்றப்படுவது போன்று அறிவின் மூலம் மனமாசு அகற்றப்படுகிறது. ஈயம் பாத்திரத்தின் ஒரு நிலையே. அறிவும் மனத்தின் ஒரு நிலையே. அறிவு நலம் வாய்க்கப் பெருத போது மனத்திற்கும் சிறப்பு இல்லை என்பதை பிரபந்த பாசுரம் விளக்கும்.

"அன்னதே பேசும் அறிவில் சிறு மனத்து" என்பது அப்பாசுர வரி. அறிவு இன்மையால் மனத்திற்கு ஏற்படும் இழிவு எத்தகையது என்பதை காட்ட "சிறுமனம்" எனக் குறிப்பிட்டுள்ளார்.

அறிவின் முதிர்ந்த நிலையே ஞானம் ஆகும். ஞானமும் மனத்தின்றே உதிக்கின்றது.

"மனஞ் செய் ஞானத்தின் பெருமை" என்கிறுர் ஆழ்வார்.

ஜடப் பொருள்களுள் வேற்றுமை காண்பதும் ஜீவர்களுக்கிடையில் வேற்றுமை காண்பதும் அஞ்ஞானம். அவையாவும் ஒரே மூலப்பொருளிடத்திருந்து தோற்றத்திற்கு வந்துள்ளன என அறிவதே ஞானம்.

இதை,

ஞானத்தின் மிக்க அறநெறி நாட்
டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி
நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக்
காரே"

என்கிறது திருமந்திரம்.

விவேகமே வடிவெடுத்தது ஞான தீபம். பக்தியினின்றுப் பெருக்கெடுக்கும் அமைதியே அதற்கு எண்ணெய். ஈசுவர தியானம் அது எரிவதற்கு ஏற்ற நல்ல காற்ருகி விடுகிறது. இடையருப் பற்றற்ற உள்ளம் அதை வைப்பதற்கேற்ற இடமாகிறது. அங்கு ஆசையெனும் பூசல் காற்றடியாதிருக்க வேண்டும். ஈசுவர சொரூபம் அத்திபத்தில் எரியும் ஒளிப்பிழம்பாகிறது.

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத்
தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல்
லார்க்கு
விளக்குடை யான் கழல் மேவலு
மாமே.'

என்கிறது திருமந்திரம்.

நாம் இவ்வுலகில் முறையோடு நல்வாழ்வு வாழவேண்டுமென்றுல் அதற்கு இறையருள் ஒன்றே துணை செய்யும். இறைவனை மறவாத நெஞ்சம் கொண்டு வாழ்தல் வேண்டும். இவ்வுண்மையினை,

மறவாதென்றும் வாழுதியேல்
வாழலாம்
மட நெஞ்சமே.

என்று குறிப்பிடுகிறது திவ்விய பிரபந்தம்.

இறைவனை மறந்தால் வாழ முடியாது என்ற அளவோடு நிற்கவில்லை. இறைவனை நினைக்காவிட்டால் அத்தகையோருக்கு, நெஞ்சம் என்ற ஒன்றே இல்லை என்று கூறுகிறது திவ்வியப் பிரபந்தம். எனவே நம் நெஞ்சைப் பெற்றிருப்பதன் பயன் இறைவனை நினைந்து வணங்குவதே! அதை செய்ய மறந்துவிட்டோமென்றுல் நாம் நெஞ்சற்றவர்கள்.

'நினையாதார் நெஞ்சென்றும்
நெஞ்சல்ல'

என்ற ஆழ்வார் திருவாக்கு உணர்த்துகிறது.

நாமெல்லாம் வாயினுல் உண்ணுதற்கே அறிவோம். அப்படி உண்ணும் உணவால் உடம்பை வளர்க்க முயல்வோம். உண்டு திரிவதுதான் வாழ்வு என்று நினைப்பவர் பலர். 'நாழி அரிசிக்கே நாம், உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்' போன்றவையெல்லாம் உணர்த்துவது இதுவே. செவிகளின் வழியாக செலுத்தப்பட்டு, மனதை அடைவதும் ஒருவகை உணவே யாகும். அவ்வுணவை உண்ணும் தகுதியுடைவர்களே மக்கள். மற்றையவர் விலங்குகட்கு சமமானவரே.

"செவியிற் சுவையுணரா வாயுணர்வின்
மாக்கள்
அவியினும் வாழினும் என்"

என்பது திருக்குறள்.

எனவே நெஞ்சக் கோயிலில் இறைவனை நிறுத்தி, ஞானத்தை வளர்த்து, மனத்துக்கண் மாசிலனுகி நெஞ்சங் கவர்ந்த திருமால் அருள் பெற்று வாழ்வோமாக.



# ஓங்காரம்

'தமஸோ மா ஜ்யோதிர்கமய'

இருளினின்று என்னை ஒளிக்கு அழைத்துச் செல்!

இருளினின்று நம்மை ஒளிக்கு, ஒளிமயமான உலகத்திற்கு கொண்டு செல்வது என்றென்றும் வேதங்களுடன் தொடங்கி ஒலிக்கும் ஓங்கார மந்திரமேயாகும்!

பரம்பொருளை போற்றும் ஒரு மந்திரம் ஓங்கார மந்திரம்!

இதுவே, வேதங்களில் 'உத்கீதம்' என வர்ணிக்கப்படுகிறது.

வேதங்களில் எந்த மந்திரங்களை உச்சரித்தாலும் ஆரம்பத்தில் 'ஓம்' எனும் 'உத்கீதத்தை' உச்சரிக்கிறார்கள். இந்த பூமியில் சிறந்தது மண்; மண்ணில் சிறந்தது நீர்; நீரினால் சிறப்பது தாவரங்கள்; தாவரங்களால் சிறப்பு மனிதன்; மனிதனால் சிறப்படைவது வாக்கு; வாக்கினால் சிறப்படைவது ருக்; 'ருக்'கினால் சிறப்படைவது 'ஸாமம்' இதனால் சிறப்படைவது 'உத்கீதம்' எனும் ஓங்காரம்.

ஓங்காரத்தினின்றும்தான் மூன்று வேதங்களும் பிறக்கின்றன. 'ஓம்' எனத்தொடங்கி ருக், ஸாம வேதங்கள் உச்சரிக்கப்படுகின்றன.

ஓங்காரத்துடன் ஒலிக்கும் மந்திரங்களை உச்சரிப்பவர் மந்திரங்களின் பொருளை அறிந்தவராயினும்,அறியாதவராயினும்,சிரத்தையுடன் மந்திரங்களை உச்சரிக்கும் போது உரிய பலன்களை அடைகிறார்.

எப்படி ஒரு மருந்தானது அனுபவம் இன்றி ஒரு மனிதனால் உபயோகப்படுத்தும் போது குறிப்பிட்ட பலனைத் தருகின்றதோ, அது போல் ஓங்கார மந்திரங்களை உச்சரிப்பவர் பொருள் அறியாராயினும் உரிய பலனைப் பெறுவர்.

ஆனாலும் தத்வ ஞானத்துடன், வீரியத்துடன் மந்திரங்கள் உச்சரிக்கப்படும் போது மந்திரங்கள் உயிர்ப்பெற்று வீரியசக்தியுடன் செயல்படும்.

ஆகாயத்தினின்றே எல்லாப் பொருள்களும் உண்டாயின என்பதை 'ஞானி'களும் 'விஞ்ஞானிகளும்' கண்ட உண்மை. அதே உண்மை உறுதியாக்கப்படுகிறது. ஆகாயத்தினின்றும் பிறக்கும் ஓங்கார ஓசை காற்றில் கலந்து தவழ்ந்து மீண்டும் ஆகாயத்தில் கலந்து தவழ்ந்து மீண்டும் ஆகாயத்தில் கலந்து ஐக்கியமாகி விடுகின்றது.

உலகங்களை பிரஜாபதி தனது தவத்தால் ஆராய்ந்தார். அத்தவத்தின் பயனாய் மூன்று வேதங்கள் தோன்றின. அவற்றை தவத்தால் ஆராய்ந்தார். அத்தவத்தின் பயனாய் பூ: புவ: ஸுவ: என்ற அட்சரங்கள் உருவாயின.

எங்கு தர்மமோ அங்கு ஜயமுண்டு! யஞ்மும், தானமும், தவமுமே விவேகிகளுக்கு பரிசுத்தம் அளிப்பவை.

யஞ்மாவது, ஈஸ்வரனை உத்தேசித்துச் செய்யும் திரவித்தியாகமாகும்: தானமாவது, மனிதர்களுக்குச் செய்யும் உதவி; தவமாவது, தன்னடக்கம். இம்மூன்றிலுந்தான் ஒரு மனித ஆத்மாவினுடைய கடமைகள் பூர்த்தியாகின்றன.

உலகை ச்ருஷ்டித்த இறைவன் தனது தவத்தால் மீண்டும் ஆராய்ந்த போது 'ஓங்காரம்' தோன்றியது.

எப்படி இலைகளெல்லாம் நரம்பினால் நன்கு ஊடுருவி வியாபிக்கப் பட்டுள்ளதோ, அதைப்போல வார்த்தைகளெல்லாம் ஓங்காரத்தினால் ஊடுருவி வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

மனித வாழ்க்கையில் தன்னம்பிக்கை ஊட்டுவதையும், செயல்கள் நடத்துவதையும் சொல்லும் வார்த்தைகள் ஓங்காரத்துடன் ஐக்கியப் பட்டே உபயோகத்தில் வலம் வருகின்றன.

செய்வோம், பார்ப்போம், கடப்போம், துஞ்சோம், துயிலோம், கேட்போம், நடப்போம், போவோம், வருவோம், கற்போம், களிப்போம் காண்போம், காப்போம், படைப்போம், உண்போம், உணர்வோம், ஒளிர்வோம் என முடிவு காட்டும் அத்தனை சீரிய வீரியமிக்க வார்த்தைகளும் ஓங்காரத்தோடு ஒலிக்கின்றன. அந்த ஓங்கார ஒலியை கேட்டு அந்த ஓங்காரப் பொருளை உணர்ந்து ஓங்காரத்தோடு ஐக்யமானவர்களுக்கு இவ்வுலகில் பேரின்பம் கிட்டும்! பேரறிவாற்றல் ஓங்கும்?

—அனுப்பியவர்:- த. பழமலைநாதன், செங்கல்பட்டு-1

8-ம் பக்கத் தொடர்ச்சி)

மையே விளக்குகின்றன. அதனால் தான் நாயனார் "முந்துற முன்னம்" பக(வ)ன் என்னும் சொல்லால் உழவனைக் குறிப்பிட்டு, 'உழவன்' என்னும் பெயரால் அவ்வாதி பகவனையே மீண்டும் பேசப்புக்கு, அவனுடைய பண்புக்கள் யாவற்றையும் வேதங்களில் கூறியபடியே எடுத்துரைக்கிறார்.

**பகவன் விஷ்ணு**

"भग त्रात:" (பகத்ராத:) (ருக் வேதம் — 3-56-6.) என்னும் வாக்கியம் தெய்வங்களுள் காப்பாற்றும் தொழிலை இயல்பாக உடையவன் பக(வ)ன் எனப் பறைசாற்றுகின்றது. அதனால் காக்கும் கடவுளாகிய திருமாலையே "பகவன்" என்னும் சொல்லால் நாயனார் குறிப்பிடுகின்றார் எனில் சாலப் பொருந்தும். முழுமுதற் கடவுளாகிய திருமாலே பரம்பொருள். அவரே பரப்பிரம்மம். முப்பாலுக்கும் ஏற்புடைய வராகத் தன்னைத் தானே அமைத்துக் கொள்பவர் அவரே யாகலின், அவரே மும்மூர்த்திகளாக வடிவங் கொண்டு முப்பாலுக்கும் ஏற்புடைக் கடவுளாகத் திகழ்கின்றார். பக(வ)ன் என்னும் சொல்லுக்குக் கீழே கொடுக்கப்பட்ட பொருள்கள் யாவும் இவரையே சார்ந்திருக்கும்.

(அ) "श्रेष्ठो देवानां भगवो भगासि"

ச்ரேஷ்டோ தேவாநாம் பகவோ பகாஸி

*(க்ருஷ்ண யஜுர் வேதம். தைத். ப்ரா—3-1-1.)*

என்னும் வேதவாக்கியம் பகவனைத் தேவர்களுள் உயர்ந்தவனென்று கோஷிக்கிறது. "தேவர்களுள் சிறந்தவர் விஷ்ணுவே" என மற்றொரு வேதவாக்கியம் அறுதியிடுகின்றது:

"अग्निरवमो देवतानां विष्णुः परमः"

அக்நிரவவோ தேவதாநாம் விஷ்ணு: பரம:

*(க்ருஷ்ண யஜுர்வேதம் ஸம்5-5-1)*

என்னும் வாக்கியத்திற்கு "தேவர்களுள் அக்நி கடையவன், விஷ்ணு முதன்மையானவர்" என்று பொருள். ஆதலின் தேவர்களுள் சிறந்தவனாகிய பகவன் விஷ்ணுவே.

(ஆ) "अक्षराणा मकारोऽस्मि"

அக்ஷராணுமகாரோஸ்மி

"எழுத்துக்களுள் யான் அகரமாகவிருக்கிறேன்" என்று சொல்லுகிற கிருஷ்ணபரமாத்மா ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் அவதாரம். ஆதலின், அவ்வகரத்தை பகவனுக்கு உவமமாக எடுத்துக்காட்டியது "பகவன்" விஷ்ணுவே என்னும் கருத்தினாற்றான்.

(இ) "अकारो विष्णुवेधसो:"

அகாரோ விஷ்ணு வேதஸோ:

*(நாநார்த்தார்ணவ ஸங்க்ஷேபம் ஏகாக்ஷர காண்டம் புல்லிங்கப்ரகணம். 1.)*

என்னும் நிகண்டு "அகரம் திருமாலின் பெயராகும்" என்றறுதியிடுகின்றது. அவ்வகரம் எழுத்துக்களெல்லாவற்றுக்கும் முதன்மையானது. அதுபோலவே அதனால் உணர்த்தப்படும் (பகவன்) விஷ்ணு, உலகிற்கெல்லாம் முதன்மையானவர். சொல்-பொருள் (वाक् - अर्थ:) என இரு கூறாகப் பிரிந்த உலகில், முதன்மையான சொல்லே முதன்மையான பொருளுக்கு அமைந்துள்ளது. ஆதலின் பகவன் விஷ்ணுவே. விஷ்ணுவிடமிருந்தே உலகம் தோன்றுகிறது. அவராலேயே பரிபாலிக்கப்பட்டு முடிவில் அவரிடமே சென்று மறைந்து விடுகின்றது என்னும் கருத்தில்,

"विष्णोस्सकाशादुद्भूतं जगत्तत्रैव च
स्थितम् ।
स्थितिसंयमकर्तासौ जगतोऽस्य जगच्च सः ॥

விஷ்ணோஸ்ஸகாசாதுத்பூதம்
ஜகத்தத்ரைவ சஸ்திதம் |
ஸ்திதிஸம்யமகர்த்தாஸௌ
ஜகதோஸ்ய ஜகச்ச ஸ: ||

*(ஸ்ரீவிஷ்ணு புராணம்—1-1-31)*

என்று வரும் விஷ்ணுபுராண சுலோகத்தைக் காண்க.

"தானே யுலகெல்லாந் தானே
படைத்திடந்து

ஒரு நாடக சபையினர் ஒரு நடிகனுக்கு ராஜவேஷம் போட்டனர். அவன் கம்பீரமாக நடிக்காமல் தீனமாக நடிக்கவே "இவனுக்கு ராஜவேஷம் பொருத்தம் இல்லை. பிச்சைக்காரன் வேஷமே பொருந்தும்" எனக் கருதி பிச்சைக்கார வேஷம் கொடுத்தனர். அது போல் பகவான் நமக்கு உயர்ந்த மனிதப் பிறவி கொடுத்துள்ள போது பகவானை பூஜிக்காமல் மிருகத் தனமாக நடந்தால் மிருகப் பிறவியைக் கொடுத்து விடுவார்.

—ஸ்ரீஸ்ரீ க்ருஷ்ணப்ரேமி சுவாமிகள்

---

வெளிவேஷம் மட்டும் இருந்தால் பயன் இல்லை. ராவவணன் வேதாத்யயனம் செய்தான். அக்னி ஹோத்ரம் செய்தான். ஹிரண்யன் தபஸ் செய்தான். கம்சனும் சிகை, கச்சம், பூணூல் முதலிய வைகளை தரித்து இருந்தான். துர்யோதனன் யாகம் செய்தான். முடிவில் இவர்கள் கெட்டு அழிந்தார்களே, ஏன்? சுயநலத்தில் மட்டுமே அவர்கள் நாட்டம் கொண்டு இருந்தார்கள். பகவத மற்றும் பாகவத பக்தியே சிறிதும் இல்லை. அதுதானே முக்யம்?

தகவல்: ஆர். சுப்பராவ்

—ஆதாரம்: பாகவத தர்மம்

## கருணைமிகு காவேரி

கங்கை, யமுனையைக் காட்டிலும் காவேரி சிறப்புடையவள். மூன்று இரவுகள் தங்கி கங்கையில் ஸ்நானம் செய்தால்தான் விசேஷம். ஐந்து இரவுகள் தங்கி யமுனையில் நீராட வேண்டும். காவேரியிலோ ஒருமுறை நீராடினாலே போதும். நமது மரண பரியந்தம் உள்ள பாபங்கள்—அதாவது செய்த பாபம் மட்டும் அல்ல, இனி செய்யப்போகிற பாபங்களும்—போய்விடும்.

" த்ரிராத்ரம் ஜாஹ்நவீதீரே
பஞ்சராத்ரம் து யாமுனே
ஸத்ய: புனாதி காவேரி
பாப மாமரணாந்திகம் "

—ஆர். சுப்பராவ்—திருக்கோவலூர்.

தானே யுண்டுமிழ்ந்து தானே
யாள்வானே"

*(திருவாய்மொழி)*

என்பது நம்மாழ்வாருடைய செஞ்சொற்கவி.

(ஈ) முதன் முதலில் 'அ' என்னும் எழுத்தை அமைத்து அவ்வெழுத்தினாலேயே இறைவனையுணர்த்தி விட்டமையின் அதுவே நூலுக்கு மங்களமாயமைந்தது. "**अथ शब्दानुशासनम्**" (அதசப்தானுசாஸனம்) என்று வியாகரணமா பாடியத்தின் தொடக்கத்தில் பதஞ்சலி முனிவர் அருளியது போல, அகரம் ஸ்ரீமந்நாராயணனை உணர்த்தவல்லது. ('**अ' इति भगवतो नारायणस्य प्रथमाभिधानमभिदधता किन्नाम मंगलं न कृतम्?**) சேக்கிழார் அருளிய சைவ நூலாகிய திருத்தொண்டர் புராணம் உகரத்தில் தொடங்கினமை காண்க. (பெரிய புராணம் "உலகெலாமுணர்ந்தோதற்கரியவன்" என்று தொடங்குகிறது. உகரம் சிவபெருமானைக் குறிக்கும் என்பதனால்.)

(உ) "பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்" என்னும் சூடாமணி நிகண்டுவின் தொடக்கத்திலுள்ள வாக்கியம். ஏற்கெனவே "**तत्र पूज्यपदार्थ**" (தத்ர பூஜ்ய பதார்த்த) என்னும் விஷ்ணு புராண ச்லோகத்தில் சொல்லப்பட்டபடி முக்கியமான பொருளாகிய விஷ்ணுவையும், கௌணமான பொருளாகிய மற்றவைகளையும் சேர்த்துக் குறிப்பிடுகிறது. "விஷ்ணுவே 'பகவன்' என்னும் சொல்லுக்கு முக்கியமான பொருள்" என்பதற்கு வேத வாக்கியங்களும் புராண வசனங்களும் ஆதாரமாகக் காட்டப்பட்டன. மற்றுங் காண்மின்!

(ஊ) "**भगं श्रीकाममाहात्म्यवीर्ययत्नार्ककीर्तिषु**"

பகம் ஸ்ரீகாம மாஹாத்ம்யரத்னார்க்க
கீர்த்திஷு

*(நாமலிங்கானுசாஸனம் — 3வது காண்டம்—நாநார்த்தவர்கம்-26)*

என்பது அமரகோசம். "பகம்" என்னும் சொல்லுக்கு பொருள்கள் பல. அவை ஷெ நிகண்டுவில் வரிசையாக கோர்க்கப்பட்டன. அவற்றுள் முதன்மையான பொருள்-'இலக்குமி' என்பது. இச்சொல்லுடன் 'வான்' என்னும் சொல் "உடையவன்" என்னும் பொருளில் சேர்ந்து "பகவான்" என்னும் சொல்லைப் பூர்த்தி செய்கிறது. 'பகவான்' என்னும் சொல்லே 'பகவன்' எனத் திரிந்தது. "ஹனுமான்" "அனுமன்" ஆனதுபோல். ஆகவே, "பகவன்" என்றால் "திருவாளன்" ச்ரிய:பதி-லக்ஷ்மீபதி என்றுபொருள். அதனால் விஷ்ணுவே பகவன்.

(எ) "**यद्यद्विभूतिमत्सत्त्वं**"

யத்யத்விபூதிமத்ஸத்த்வம்

என்று ஏற்கெனவே எடுத்துக் காட்டப்பெற்ற பகவத்கீதை வசனத்தால் "உலகிலுள்ள சிறந்த பொருள்கள் யாவும் என்னுடைய அம்சத்தினின்றும் தோன்றியவை" என்று கிருஷ்ணன் அருளுகிறார். அதனால் விஷ்ணுவின் அம்சம் பெற்று இருக்கின்றமையின், ஏனைய பொருள்களும் "பகவன்" எனப்படுவதியல்பே. ஆனால் அவ்வழகு முக்கியமானதல்ல. கௌணமே என்பது **तत्र पूज्यपदार्थ** (தத்ர பூஜ்ய பதார்த்த) என்னும் விஷ்ணுபுராண சுலோகத்தினால் ஏற்கெனவே காட்டப்பட்டது.

(ஏ) மேற்கூறிய கருத்தை விபரீதமாகக் கொள்ள முடியாது. அதாவது விஷ்ணுவைத்தவிர மற்ற பொருள்களில் ஏதேனும் ஒன்றை முக்கியமாக வைத்து விஷ்ணுவைத்தான் கௌணமாகக் கொள்ளலாமே என்று நினைப்பது கூடாது. அதற்கு மேலே 'ஊ' 'எ' என்றும் தலைப்பில் கூறியதே காரணம். மேலும்:

"**एवमेष महाञ्छब्दो मैत्रेय भगवानिति ।
परमब्रह्मभूतस्य वासुदेवस्य नान्यगः ॥**"

ஏவமேஷ மஹாந்சப்தோ மைத்ரேய
பகவாநிதி |
பரமப்ரம்ம பூதஸ்ய வாஸுதேவஸ்ய
நான்யக: ||

என்று ஏற்கெனவே காட்டப்பட்ட விஷ்ணுபுராண சுலோகம், "பகவான் என்னும் சொல் மிகப்பெரியது. இது பரம்பொருளாகிய வாஸுதேவனுக்கே. வேறு பொருளில் செல்லாது" என்று ஐயந்திரிபுகளுக்கு இடமின்றி அறுதியிடுகின்றது. ("பகவான்" என்னும் சொல் "பகவன்" எனத்திரிந்தது. ஆதலால் விஷ்ணு புராணத்தில் "பகவான்" என்னும்

சொல்லைப்பற்றிக் கூறப்பட்ட விஷயங்கள் யாவும் "பகவன்" என்னும் சொல்லுக்கேயமைந்தன. 'பகவான்' என்னும் சொல் முதல் வேற்றுமை யொருமையில் வருகின்றது. "பகவ:" (भगव:) என்பது அதனுடைய விளி வேற்றுமையொருமை. "பகவன்" என்பது மேற்கூறிய இரண்டிலொன்றின் திரி சொல்லேயாகும். "பகவான்" என்பது "பகவன்" என்று திர்ந்துவந்ததாகக் கொண்டால், "அனுமான்" "அனுமன்" என்பது போலாகும். "பகவ:" என்பது 'பகவன்' என்று வந்ததாகக் கொள்ளின் राम: இராமன் - என்பது போலாகும். 'பகவான்' என்னும் சொல்லின் விளி வேற்றுமையொருமையில் 'பகவன்' என்னும் சொல் உளது. அதையே சிறிது மாறுபட்ட கருத்துடன் இங்கு பிரயோகித்ததாகவும் கொள்ளலாம். எவ்விதத்தாலும் பகவான்-என்னும் சொல்லின் தனிச் சிறப்புக்கள் யாவும் "பகவன்"என்னும் சொல்லில் இடம்பெறும்)

(ஐ) பன்னிரண்டு மாதங்களிலும் பன்னிரண்டு பெயர்கள் சூரியனுக்கு வழங்கப்படுகின்றன. சூரியன் ஒருவனே. ஆயினும் கால வேறுபாடு பற்றிப் பெயர்கள் வேறுபடுகின்றன. **नानालिंगत्वादृतूनां नानासूर्यत्वं** (நாநாலிங்கத்வாத்ருதூநாம் நாநாஸௌர்யத்வம்) ருது காலங்களின் அடையாளங்கள் பலவிதமாக இருப்பதனுல் அதற்குக் காரணமான சூரியன்கள் பல பேர்களென்கை. (தைத்-ஆரண்யம் 1-7-6) அவற்றுள் தை மாதத்திய சூரியனுக்கு "பக(வ)ன்" என்றும், பங்குனி மாதத்திய சூரியனுக்கு "விஷ்ணு" என்றும் பெயர். இதனுல் "விஷ்ணுவே" "பக(வ)ன்" என்பது விளங்கும். சூரியன்களுள் கடையானவன் (விஷ்ணு) மற்றெல்லோரினும் குணங்கள் மிக்கவன்"என்னும் பாரத வாக்கியம் ஈண்டு நோக்கற்பாலது.

**("जघन्यजस्तु सर्वेषामादित्यानां गुणाधिक:"**

மகாபாரதம்—1-65.)

**"प्रातर्जितं भगमुग्रं हुवेम वय**
**पुत्रमदितेर्योविधर्ता"**
**"ततो विवस्वानादित्योऽजायत"**

ப்ராதர்ஜிதம் பகமுக்ரம் ஹுவேம
வயம் புத்ரமதிதேர்யோவிதர்த்தா
(ருக்வேதம்—7-42-2)

ததோ விவஸ்வாநாதித்யோஜாயத
(க்ருஷ்ண யஜுர்வேதம் — தைத். ஸம்—6-5-6-2.)

என்னும் வேதவாக்கியங்கள் பக(வ)னை (ஆதித்தியனை) அதிதியின் மகனென்றும், எல்லாவற்றையும் தரித்து நிற்பவனென்றும் சொல்லுகின்றன. விஷ்ணு, வாமனவதாரத்தில் அதிதி-காச்யபர் இருவருக்கும் மகனைப் பிறந்தது பிரஸித்தம். மேலும் விஷ்ணுவை **"ध्येयस्सदा सवितृमण्डलमध्यवर्ती"** (த்யேயஸ்ஸதா ஸவித்ரு மண்டல மத்யவர்த்தீ) என்கிறபடி ஆதித்திய மண்டலத்தின் நடுவிலேயே வீற்றிருப்பவராகத் தியானம் செய்கின்றனர். அதனுல் பகன்-பகவன்-பகவான் என்றெல்லாம் பெயர்பெற்றவர் ஸ்ரீமஹா விஷ்ணுவே.

தேவர்களின் தந்தையாகக் கூறப்படும் "கச்யபர்" (**कश्यप**) என்பவரும் ஒரு சூரியனே. **"कश्यपोऽष्टम:"** (கச்யபோஷ்டம:) என்னும் வேதவாக்கியம் "கச்யபன்" எட்டாவது சூரியன் என்கிறது. (தைத், ஆர — 1-7-1.) **"कश्यपादुदितास्सूर्या:"** (கச்யபாதுதிதாஆஸூர்யா:) என்னும் மற்ருெரு வேதவாக்கியம், "கச்யபனிடமிருந்து மற்ற சூரியன்கள் தோன்றுவதாக" கூறுகின்றது. (தைத், ஆர—1-8-6)

(ஒ) உலகத்தைக் காப்பவன் உழவன். இவன் மானிடப்பிறவி. தேவர்களுள் "விஷ்ணு" காப்பாற்றும் பொறுப்பைத் தாங்கி நிற்பவர். வேதங்களில் உழவனுக்கும் விஷ்ணுவுக்கும்தான் பக(வ)ன் என்னும் பெயர் வழங்குகிறது. அதனுல் பகவன் விஷ்ணுவே.

(ஓ) மிகச்சிறிய வடிவத்துடன் தோன்றி மூன்றடிகளால் உலக முழுவதையும் அளந்து அகப்பற்றையும் புறப்பற்றையும் அழித்து உலகைக் காப்பாற்றினுர் ஸ்ரீமகாவிஷ்ணு. மிகச் சிறிய செய்யுள் வடிவத்தில் தோன்றி முப்பால்களை விளக்கி அவ்வாறே உலகைக் காப்பாற்றுகிறது திருக்குறள். அதனுல் திருக்குறளே திருமால் வடிவமானதெனலாம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் அப்படியே வழங்கியுமிருக்கிருர். (மீனுய் ஆமையுமாய் நரசிங்கமுகமாய்க் குறளாய் - திருவாய்மொழி — 5-1-10.) அதனுல் இந்நூலின் முதன் முதலில் வாழ்த்தப்படும் பகவன் விஷ்ணுவே. "மூன்றடிகளால் உலகை அளந்து அதனைத் தரிப்பவர் விஷ்ணுவே" என்பதற்கு **"एको यद्धारयद्देव:"** (ஏகோ யத்தாரயத்தேவ:) (தைத். ஆரண்யகம்—1-8-3) **"त्रिपदाद्धारयद्देव:"** (த்ரிபதாத்தரரயத்தேவ:) (தைத்.ஆரண்யம்—1-8-3) **"विष्णुना विधृते भूमी"** (விஷ்ணுநா வித்ருதே பூமி) (தைத். ஆரண்யம்—1-7-6) என்னும் வேத வாக்கியங்கள் பிரமாணம். இவைகளின் கருத்து:- "விஷ்ணு ஒருவராகவே உலகங்களையெல்லாம் தரிக்கிருர்" "தேவனுகிய விஷ்ணு மூன்றடிகளால் உலகத்தைத் தரிக்கிருர்" "விஷ்ணுவினுல் பூமி தரிக்கப்பட்டுள்ளது." என்பது.

இதுபோல் எண்ணற்ற ஆதாரங்கள் உள்ளன. அவைகள் யாவற்றையும் ஈண்டு விளக்கிக் கூறின் கட்டுரை விரியும் என்றஞ்சி விடுத்தனம். அறிவாளிகள் கூர்ந்து நோக்கி உணருக.

உலகில் உயர்ந்த நிலைமையில் உள்ளவர்களைப் பாக்கியவான்கள் என்பர். பாக்கியம்-ஸௌபாக்கியம் - ஸுபகன் (**भाग्यं सौभाग्यं सुभग:**) என்றெல்லாம் மேன்மையைக் குறிக்கும் சொற்கள் பல உள. அவை யாவும் "**भज्**" என்னும் பகுதியிலிருந்தேதோன்றியவை. தமிழ்ப் பகுதியாகிய "பகு" என்பதினின்றும் "பகவு" என்னும் சொல் உருவாகின்றது. அதற்கு "நடுவு நிலைமை" என்னும் பொருளுமுண்டு. பகவு என்பதற்குச் சமமான சொல்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

'பகல்' என்பது. அது "படுவதுண்டு பகலாற்றி" என்னும் செய்யுளில் 'நடுவுநிலைமை" என்னும் பொருளிலேயே உபயோகிக்கப்பட்டுள்ளது. "வேண்டுதல் வேண்டாமையிலான்" என்னும் குறளும் இறைவனை நடுவு நிலைமையிருப்பவனாகவே பேசுகின்றது. "न मे द्वेष्योऽस्ति न प्रियः" (ந மே த்வேஷ்யோऽஸ்தி ந ப்ரிய:) என்கிறது பகவத்கீதை. காமக்குரோதங்களுக்கு வசப்படாமல் மழையையும் வெய்யிலையும் மாறுபாடற்ற நிலையிலேயே, நின்று தாங்கிவரும் மலைகள் போல் மனதையடக்கி, ஐம்புலன்களை வென்று விருப்பு வெறுப்பற்ற நிலையிலிருப்பவனே பகவன். அவனே உலகில் முதன்மையானவன். அவன் எல்லாம் வல்ல இறைவனே. அதே போல் வாழ்ந்து வரும் ஒவ்வொருவனும் பகவனே. அவன் இறைவனது அம்சம் பெற்றவன். முதன் முதலாக இச்சொல்லை உபயோகித்த நாயனார் உலகிலுள்ளோர் யாவரும் தெய்வீகமான இன்பமயமான வாழ்க்கை நடத்தி உலகை உய்விக்க வேண்டுமென்னும் ஆசியையும் கூட வெளியிடுகிறார் போலும். அவ்வாறு உயர் வாழ்வு வாழ்வதற்கான அரிய உபதேசங்கள் அடங்கிய நூல் இனி தோன்றப்போகின்றது என்று குறிப்பாக உணர்த்துவதாகவும் கொள்ளக் கூடும்.

ஸம்ஸ்க்ருத வேதங்களிலும் அவற்றைச் சார்ந்த நூல்களிலும், தமிழ் இலக்கண இலங்கியங்களிலும் ஆழ்ந்த அறிவுள்ள பெரியோர்கள் இதுபோன்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டு உலகுக்கு உண்மையை விளக்க வேண்டும்.சிறிய ஞானத்தனுகிய அடியேன், இதுபோன்ற செயலில் ஈடுபடுவது பொருத்தமற்றதேயாகும். ஆயினும் "ஆசை பாவமறியாது" என்கிறபடி "பகவன்" என்னும் சொல்லுக்குச் சிலர் சிறிதும் பொருந்தாத பொருள் பகர்வதைக் கண்டு இக் கட்டுரை எழுதினேன். அறிவாளிகள் கருணை கூர்ந்து உற்றுநோக்கிக் குணத்தை ஏற்றுக் கொள்ளுமாறு தாழ்மையுடன் வேண்டிக் கொள்கிறேன்.

முற்றும்.

# வேதமும் சமயமும்

சென்ற இதழ்த் தொடர்ச்சி

ஸமத்துவமே யோகம். எக்கர்மம் செய்யினும், அதாவது பிராம்மண கர்மம், வைஸ்ய கர்மம், க்ஷத்ரிய கர்மம், சூத்ர கர்மம் எதுவாயினும், ஸமபுத்தியுடன் செய்தால் புண்ணிய பாபம் தொடராது. இது கர்மத்தில் ஸாமர்த்தியம்.

பிராம்மண கர்மாக்களை சாஸ்திர முறைப்படி உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற மனப்பான்மை இன்றி சமன் நிலையில் ஆற்றுபவன் இறைவனை அடைகிறான். (பிராம்மண தர்மம்)

ஒருவன் ராணுவத்தில் நாட்டையும் மக்களையும் காப்பாற்றும் கர்மாவை செய்பவன் சமன்நிலை எய்தி இறைவனை அடைகிறான். (க்ஷத்ரிய தர்மம்)

மற்றும் ஒருவன் வியாபாரம் பசு சம்ரக்ஷணை செய்யும் கர்மாவில் சமன் நிலை எய்தி இறைவனை அடைகிறான். (வைஸ்யதர்மம்)

இன்னொருவன் யாவருக்கும் நற்பணி செய்து தன் கர்மாவில் சமன் நிலை அடைந்து இறைவனை அடைகிறான். (சூத்ர தர்மம்)

நால்வரும் ஒரே இனத்தவராயினும் உயர்ந்தவன் தாழ்ந்தவன் என்ற மன நிலையை தன்னிடமிருந்து விலக்காவிடில் தம் கர்மாவிற்கேற்ப மற்றொரு யோனியில் தோன்றி தாழ்ந்த நிலை அடைகிறான்.

உலகில் உயர்ந்த தத்துவத்தை வேறு எந்த வேதங்களும் தோன்றாத காலத்திலேயே ஜ்ஞான, விஜ்ஞான விசாரணையின் அற்புதங்களை நமக்களிக்கும் நம் ரிக்வேதத்தை நாம் எல்லா மக்களுக்கும் போதிக்கத் தவறிவிட்டோம் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

வர்ணாச்ரம தர்மத்தை ஜாதியாக்கி அது உருவாக்கப்பட்ட நோக்கம் அழிக்கப்பட்டு ஜாதி வெறியைத் தூண்டும் எல்லா இழி முறைகளையும் தர்மமாக்கி, வேதத்தை மற்ற வர்ணத்தார் படித்தல்கேட்டல் கூடாது என்ற குறுகிய நோக்கத்தைப் புகுத்தி, தேவ மொழியான சமஸ்க்ருதத்தை புறக்கணிக்கச் செய்து, நம் இந்து சமயத்தை சாக்கடையில் தள்ளிப் பிற சமயத்தார் நம் உயர்வு தாழ்வு கற்பனையையும் வழிபாட்டு முறையினையும் காட்டுமிராண்டி முறை என்று எண்ணி நகையாடும் நிலைக்கு கொண்டு வரப்பட்டது.

இன்று பிராம்மண ஜாதி என்று சொல்லிக் கொள்வாரிலேயே 75 சதவிகிதம் சமஸ்கிருதம் படிக்காதவர்கள். சம்ஸ்கிருதத்தையும் வேதத்தையும் அறிந்த பெரியோர்கள் ஆதரவின்றி அவர்களின் ஜ்ஞானம் பிறருக்குப் பயன்படாமல் அவர்களோடேயே அழிந்துக் கொண்டிருக்கிறது.

நம் இந்து சமயத்தில் தோன்றிய மஹான்களும், ஆழ்வார்களும், நாயன்மார்களும் அவதார புருஷர்கள் என்று போற்றப்படுகிறார்கள். அவர்கள் யாவரும் உயர் ஜாதியில் தோன்றியவர்களல்ல. அவர்களை எல்லாம் சூத்திரர்கள் என்று நாம் ஒதுக்கிவிடவில்லை. அவர்கள் மனித குலத்தில் தோன்றிய உண்மையான உயர் ஜாதியர். உயர்ந்த கர்மாவை செயல்படுத்தி நமக்கு வழிகாட்டிய, நம் வணக்கத்திற்குறிய பெரியவர்கள். அவர்கள் தம்மை உயர்ந்த ஜாதி என்று கூறிக்கொள்ளவில்லை. அடியார்க்கு அடியேன் என்றுதான் கூறிக் கொண்டார்கள் அந்த மஹான்கள்.

பாமர மக்கள் நம் வேதத்தையும் அதன் தலை சிறந்த போதனைகளையும் அறியாமல் தமக்குத் தோன்றிய முறைகளிலெல்லாம் வழிபாட்டை செய்து இறைவனை இழிவுபடுத்திக் கொண்டிருக்கிறார்கள். இந்து சமயத்தையே அறியாத மக்கள் இந்துக்களா! கிராமங்களில் சென்று ஒரு படிக்காத இஸ்லாமிய பெண்ணை நீர் எந்த மதத்தைச் சார்ந்தவர் என்று கேட்டால் நான் முஸ்லீம் என்பார். ஒரு கிருஸ்தவப் பெண்ணைக் கேட்டால் கிருஸ்தவப் பெண் என்று சொல்வார். ஆனால் அதே நிலையிலுள்ள ஒரு இந்து மதப் பெண்ணைக் கேட்டால் நாங்கள் கருப்பண்ணசாமி கும்பிடுபவர் என்றுதான் அவரால் சொல்ல முடிகிறது. அப்பெண்ணுக்கு தான் எந்த சமயத்தை சார்ந்தவள் என்று சொல்லத் தெரியாது. அப்பெண் எப்படி இந்து சமயத்தவள் என்று ஏற்றுக்கொள்ளப்படுகிறாள்? இதை எல்லாம் சாதகமாக்கிக் கொண்டு பிற சமயத்தார் பாமர மக்களைக் கவர்ந்து தம் மதத்தில் சேர்த்துக் கொள்ள ஏதுவாகிறது. பிற மதத்தார் தம் மதங்களைப்பெருக்கவும்உயர்ந்ததென உணரச் செய்யவும் வழிவகை செய்து கொள்கின்றனர். நாம் அதற்கீடாக வாவது என்ன செய்து கொண்டிருக்கிறோம்? நம் தேர் திருவிழாக்களைப் போல் பிறமதத்தாரும் ஏதாவது ஒரு விழாவினைச் செய்து மக்களைக் கவர்கின்றனர். உண்மையை ஒத்துக் கொள்ள வேண்டுமானால் இந்து தர்மத்தை அறியாதவர்கள் எல்லாம் நாம் இந்துக்கள் என்று நினைத்துக் கொண்டுள்ளோம். அவர்கள் நம் உயர்வு தாழ்வு கற்பனையில் மனம் தளர்ந்து பிற மதத்தைத் தழுவுகின்றனர்.

நாம் எம்மதத்திற்கும் எதிரிகள் அல்ல. ஆனால் நம் மதத்தை சீர் செய்து கரைபடாமல் காத்துக் கொள்ள வேண்டியது நம் கடமையாகும்.

திரு கே. கணேசன்,
ஈரோடு.

# அமாவாசையும் பவுர்ணமியும்

உலகம் தோன்றிய நாள் முதல் வானில் நமக்கு நன்கு புலப்படும் மாற்றம் சந்திரனின் வளர்ச்சியும் தேய்மானமும் ஆகும். ஒரு மாதத்தில் சந்திரன் வளர்வதும் தேய்வதும் நிகழ்கிறது. அதில் 15 நாட்கள் வளர்ச்சி வளர்பிறை சந்திரன் என்றும், 15 நாட்கள் தேய்தல் தேய்பிறை சந்திரன் என்றும் வழங்கப்படுகிறது. உண்மையில் சந்திரன் வளரவோ தேயவோ செய்வதில்லை. பூமி சுற்றுவதும் சந்திரன் சுற்றுவதும் நமக்கு அவ்வாறு தோற்றமளிக்கின்றன.

சந்திரன் முழுதாக வளர்ச்சியடைந்த நாளை பவுர்ணமி என்றும் முழுதாக சந்திரன் இல்லாத நாளை அமாவாசை என்றும் கூறுகிறோம். பஞ்சாங்கங்கள் வளர்பிறையை சுக்கில பட்சம் என்றும் தேய்பிறையை கிருஷ்ண பட்சம் என்றும் கூறுகின்றன. சுக்கிலபட்சம் 15 நாட்களும் கிருஷ்ணபட்சம் 15 நாட்களும் 15 திதிகளாக குறிப்பிடப்படுகின்றன. அவை 1. பிரதமை 2. துதியை 3. திரிதியை 4. சதுர்த்தி 5. பஞ்சமி 6. சஷ்டி 7. சப்தமி 8. அஷ்டமி 9. நவமி 10. தசமி 11. ஏகாதசி 12. துவாதசி 13. திரயோதசி 14. சதுர்தசி 15. பவுர்ணமி (அ) அமாவாசை.

அமாவாசைக்குப் பிறகு நான்காம்நாள் முதல் முகமதியர் மாதங்கள் தொடங்கும். கிரகணங்கள் அமாவாசையிலும் பவுர்ணமியிலும் மட்டுமே ஏற்படும். அதில் சூரிய கிரகணங்கள் அமாவாசை அன்றும் சந்திர கிரகணங்கள் பவுர்ணமி அன்றும் ஏற்படும். இரண்டு ஆண்டுகளில் 25 அமாவாசைகளும் 25 பவுர்ணமிகளும் உண்டாகும்.

19 ஆண்டுகளுக்கு ஒருமுறை குறிப்பிட்ட ஒரே தேதியில் அமாவாசையும் பௌர்ணமியும் உண்டாகும். ஒரு மாதத்தில் இரண்டு பவுர்ணமியோ இரண்டு அமாவாசையோ ஏற்பட்டால் அந்த மாதம் மல மாதம் என்று வழங்கப்படும்.

| மாதங்கள் | அமாவாசை உதயமாகும் நட்சத்திரங்கள் | பவுர்ணமி உதயமாகும் நட்சத்திரங்கள் |
|---|---|---|
| சித்திரை | அசுவனி | சித்திரை |
| வைகாசி | ரோகிணி | விசாகம் |
| ஆனி | திருவாதிரை | கேட்டை |
| ஆடி | பூசம் | உத்திராடம் |
| ஆவணி | மகம் | அவிட்டம் |
| புரட்டாசி | உத்திரம் | பூரட்டாதி |
| ஐப்பசி | சுவாதி | அசுவனி |
| கார்த்திகை | அனுஷம் | கார்த்திகை |
| மார்கழி | மூலம் | திருவாதிரை |
| தை | உத்திராடம் | பூசம் |
| மாசி | அவிட்டம் | மகம் |
| பங்குனி | உத்திரட்டாதி | உத்திரம் |

இவை எல்லா ஆண்டுகளிலும் பொதுவாக ஏற்படுபவை. இந்துக்களின் பண்டிகைகளை நிர்ணயிப்பதில் அமாவாசையும் பவுர்ணமியும் முக்கிய பங்கை வகிக்கின்றன.

—பூம்புகார் ஜி. சீனிவாசன்

பெரியோர்கள், மடாதிபதிகள், செல்வாக்குள்ளவர்கள், தனவந்தர்கள் சமன்நிலைநின்று நம் மதச்சட்டங்களைச் தூய்மைப்படுத்தி எல்லா மக்களும் இறைவனின் குழந்தைகள் என்ற நிலையில் சிறந்த முறையில் ஆவன செய்ய முன்வரவேண்டும். ஆச்சார அனுஷ்டானங்களை அவர்களுக்காக மட்டும் செய்து கொண்டு விடுவதால் எந்த பயனையும் அவர்கள் அடைய முடியாது.

நாம் புதிது புதிதாக ஆலயங்கள் கட்டவேண்டியதில்லை. இருக்கும் ஆலயங்களை இக்கால நிலைக்கேற்ப மாற்றி அமைத்து குருட்டு நம்பிக்கையை மக்களிடம் போக்கி உயர்ந்த வழிபாட்டு அனுஷ்டான முறைகளோடு நிர்வகிக்கப்பட வேண்டும். இடைக்காலத்தில் மக்களிடையே வேற்றுமை உயர்வு தாழ்வு கற்பிக்கும் எந்த இடைக்கால ஆச்சாரங்களையும் விலக்கி மக்கள் எல்லோரும் பேதமின்றி அனுஷ்டிக்கும் முறைகளைக் கற்பித்து இறைவன் யாவருக்கும் சமன் நிலையில் அவரவர் கர்மாக்களுக்கேற்ப அருள்பாலிக்கிறான் என்ற உண்மையை உணரச் செய்ய வேண்டும். அறிந்தவர் அறியாதவர்களை இழிவுபடுத்தாமல் தம்முடன் சேர்த்து நல்வழிப்படுத்தல் வேண்டும்.

**न बुद्धिभेद जनये दज्ञानां कर्मसङ्गिनाम् ।**
**जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥**

ந புத்திபேதம் ஜனயேதக்ஞானும்
கர்மஸங்கினும் |
ஜோஷயேத் ஸர்வகர்மாணி வித்வான்
யுத்த: ஸமாசரன் ||
கி. 3-26.

கர்மத்தில் பற்றுள்ள அஞ்ஞானிகளிடம் புத்திமாறுட்டத்தை உண்டாக்கக் கூடாது. சமபுத்தியுள்ள அறிவாளிகள் எல்லாக் கர்மங்களையும் தானும் அனுஷ்டித்துப் பிறரையும் அக்கர்மங்களில் ஈடுபடச் செய்ய வேண்டும்.

ஆசை, மமதை, விருப்பு, வெறுப்பு, உயர்வு தாழ்வு மனப்பான்மை முதலிய மனக்கிளர்ச்சிகளை அறவே துறந்தவன் சமன்நிலை அடைகிறான். இந்நிலையில் பகவானை பக்தியோடு அனுபவன் பகவானுள் ஐக்யமாகிறான். இதில் உயர்ந்தவன் தாழ்ந்தவன், பணக்காரன் ஏழை என்ற பேதம் இல்லை என்பதை மக்களை உணரச் செய்யவேண்டும்.

இந்து சமயம் மிக உயர்ந்த தத்துவங்களைக் கொண்டது. ரிக் வேதத்திற்கு ஒப்பான வேதம் சமயம் உலகில் வேறுயாதும் இல்லை என்பதை ஆதாரப்பூர்வமாக எடுத்துக் கூற வேண்டும். இதற்கு விஷய ஞானமுள்ள குருமார்கள் தேவை. இவர்கள் உயர்வு, தாழ்வு, ஆசை, மமதை, விருப்பு, வெறுப்பு அற்ற சமன்நிலை அடைந்தவர்களாக இருத்தல் வேண்டும்.

## பக்திக்கு எடுத்துக்காட்டு

அழிஞ்சில் விதை எப்படித் தாய் மரத்துடனேயே ஒட்டிக் கொள்ளுகிறதோ, ஊசி எப்படி காந்தத்தால் கவரப்படுகிறதோ, பதிவிரதை எப்படித் தன் கணவன் நினைவிலேயே ஆழ்ந்திருக்கிறாளோ, கொடி எப்படி மரத்தைத் தழுவி வளருகிறதோ, நதி எப்படிக் கடலில் கலக்கிறதோ, அப்படியே இறைவனின் திருவடிகளில் சதா சர்வ காலமும் மனதை அமிழ்த்தியிருப்பது தான் பக்தி.

—சிவாநந்த லஹரி

## சிவனும் திருமாலும்

சிவராத்திரிக்கும் ஸ்ரீஜெயந்திக்கும் இடையே சரியாக 180 நாட்கள் இடைவெளி இருக்கும். ஒன்றில் ஞான ஜோதியான லிங்கம் உதித்தது. அதுவேதான் இன்னொன்றில் வெளியிலே எல்லாம் கருமையாக வைத்துக்கொண்டாலும் உள்ளே ஞானத்திலும் கருணையிலும் ஜோதியான கண்ணனாக வந்தது.

அனுப்பியவர்:- கமலா பாரியப்பன்

—காஞ்சி பெரியவாள்

இதற்கு,இந்த சத்காரியங்களுக்குப் பெரியவர்கள் திருவுள்ளம் கொண்டு நம் மக்களுக்கும் இந்து சமயத்திற்கும் தன்னலமின்றிச் சேவை செய்ய ஆங்காங்கே மடங்களும் குருக்களும் தேவை என்பதை உணர்ந்து சமய, சாங்கிய, யோக, ஆச்சார அனுஷ்டானங்களைக் கற்றுப் பட்டம் பெற்ற ஆர்வமிக்க பட்டதாரிகளை உருவாக்கி அவர்களுக்குச் சமுதாயத்தில் உயர்ந்த அந்தஸ்தை மக்கள் உணரும்படி செய்து மக்கள் பக்தியுடன் அந்த குருமார்களை அணுகும்படிச் செய்ய வேண்டும். குருமார்கள் ஜாதி பேதமற்ற உயர்ந்த பக்குவமான மனத்துடன் எல்லா மக்களையும் அணுகி அவர்களுக்கு வழிபாட்டு முறைகளையும், ஜெபமந்த்ரங்களையும் போதிக்க போதுமான வசதிகள் செய்து கொடுக்க வேண்டும். நம் இந்து மதம் புனிதமானது. ஒப்புயர்வற்ற ஞானத்தை அளிக்கவல்லது, சிறந்த வழிமுறைகளைக் கொண்டது. உயர்வு தாழ்வு கர்வம் கொள்பவன் இந்து சமயத்திற்கு எதிரி என்பன போன்ற உண்மை நிலையை பாமர மக்களும் அறிந்து பின்பற்றும் வகையில் போதிக்க, ஜாதி மத பேதமின்றி எல்லா இளைஞர்களுக்கும் பயிற்சி அளித்து பட்டம் பெற்ற பின், சமய சேவைக்குத் தம்மை அர்ப்பணிக்கும் இளைஞர்களுக்கு ஆங்காங்கே கோயில்கள் இருக்கும் இடங்களில் மடங்களை அமைத்து, தந்நலம் கருதாது நம் சமயத்திற்கும் மக்களுக்கும் ஆர்வமுடன் சேவை செய்ய ஆவன செய்ய வேண்டும்.

இப்படி அமைக்கப்படும் மடங்களுக்குப் பெரியவர்களும் சந்நியாசிகளும் ஜீயர்களும் மக்களிடம் ஜாதி மதபேதமற்ற சமுதாய மறுமலர்ச்சியை உருவாக்கவேண்டும். பொருளாதார சீர்கேட்டினால் அல்லலுறும் ஏழை எளிய தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கல்வி,தொழில் முதலிய ஜீவாதாரத் தேவைகளை அளித்து அவர்கள் இந்துக்கள், ஓர் உயர்ந்த தொன்மையான சமயத்தை சார்ந்தவர்கள் என்பதை உணரச்செய்து தாழ்வு மனப்பான்மையையும் தவறான வழிபாட்டு முறைகளையும் களைந்திட வேண்டும்.

இப்படி அமைக்கப்படும் மடங்கள் ஆங்காங்கே அமைந்துள்ள கோயில்களின் சார்பில் இயங்கச் செய்து மக்கள் குறிப்பிட்ட நாட்களில் குருமார்களின் ஆத்மீக ஞானபோதனைகளைக் கேட்டால் தான் உண்மையான வழிபாடு செய்ததாக உணரச்செய்ய வேண்டும். பொருள் படைத்தோரையும் பக்தர்களையும் இந்த சத்காரியத்திற்காக மனமுவந்து பொருளுதவி செய்து மடங்களை பராமரிக்க, இந்த இந்த கர்மயோகத்தின் பலனை பெரியவர்கள் எல்லோரையும் அடையத் தூண்ட வேண்டும்.

இந்து சமய தெய்வ வழிபாட்டு முறையை எளிமைப்படுத்தி ஆச்சார அனுஷ்டானங்களை உணர்ந்து எல்லோரும் ஒரே முறையான வழிபாட்டை அனுஷ்டிக்கச் செய்ய வேண்டும். உருவ அருப வழிபாட்டு நிலையை எல்லோரும் புரிந்து கொள்ள வேண்டும். ஒரே உருவத்தை வேறு வடிவம் கலக்காமல் மனதில் நிறுத்தி த்யானம் செய்ய வேண்டுமென்று சாஸ்திரம் கூறுகிறது. யோகத்தின்

# மதிப்புரை...

## நூல்: சிறுவர் பாரதம்

ஆசிரியர்: கலைமாமணி மனசை ப. கீரன். கிடைக்குமிடம்: கமலவேணி பதிப்பகம், 'தணிகை' 135, சாந்திநகர், குரோம்பேட்டை, சென்னை-44

விலை: ரூ. 7/-

சென்னை வானொலி பள்ளிக் கல்வி நிகழ்ச்சிப் பொறுப்பாளராக வுள்ள திரு. மனசை ப. கீரன் அவர்கள் அழகுற எழுதியுள்ள இந்நூல் திருமலை - திருப்பதி தேவஸ்தானத்தாரின் பொருளுதவியுடன் கமல வேணி பதிப்பகத்தாரால் 1982-இல் வெளியிடப்பட்டு, மீண்டும் திருத் திய இரண்டாம் பதிப்பாக இப்பொழுது வெளிவந்துள்ளது.

இவரது அருமைத் துணைவியார் கமலவேணி கீரனின் நினைவுக் காணிக்கையாக சிறுவர்-சிறுமியர்க்கான இந்நூல் வெளிவருவது திருமதி கீரனின் பிள்ளைப் பாசத்தின் வெளிப்பாடாகும்.

வியாசர் பாரதம் என்று வழங்கப்படுகிற வடமொழி இதிகாச நூலான மகாபாரதம்—பெருந்தேவனார், வில்லிப்புத்தூரார், நல்லாப் பிள்ளை முதலியோரால் கவிதையாக வழங்கப்பட்டுள்ளது.

'அறமுரைத் தானும் புலவன் முப்பாலின்
திறமுரைத் தானும் புலவன் — குறுமுனி
தானும் புலவன், தரணி பொறுக்குமோ?
யானும் புலவன் எனில்!'

என்று தன்னடக்கத்துடன், தொண்டை மண்டலப் புலவர் பொய்யா மொழிப்புலவர் பாடியுள்ள வெண்பாவில், "அறம்" என்று குறிப்பிட் டுள்ளது மகாபாரதத்தையாகும். அந்த மகாபாரத இதிகாச காலத் தில் நிலவி வந்த அறநெறிகளை எடுத்துக்காட்டும் நிகழ்ச்சிகள் நிறைந் தது—மகாபாரதம்.

அத்தகைய பல்வேறு அற நிகழ்ச்சிகளைப் பல்வேறு பாத்திரங்கள் மூலம் எடுத்துக்காட்டி, இளஞ்சிறார்கள் மனதில் பதியும்படியாக, இந் நூலை எளிய நடையில் கோர்வையாக எழுதியுள்ள ஆசிரியர் கீரனின் திறம் வியந்து பாராட்டத்தக்கதாகும்.

கடமையை எடுத்துக்காட்டி, அறத்தை வலிவுறுத்தி எழுதியுள்ள பாங்கு, பள்ளிச் சிறார்கள் அறிவும், ஒழுக்கமும் பெற்று விளங்க வேண் டும் என்ற ஆசிரியரின் பேரவாவை விளக்குவதாக அமைந்துள்ளது.

ஆசிரியர் கீரனின் எழுத்துத் தொண்டு மேலும் சிறக்க மனமார வாழ்த்துகின்றேன்.

—முகவை இராஜமாணிக்கம்
சென்னை-14.

சிறப்பையும் அப்பியாச யோகத்தைப் பற்றியும், தியானமும் யோகமும் சிறப்பானது என்பதையும் அதை அப்பியசித்து அடையும் வழிமுறை களையும் போதிக்க வேண்டும்.

எந்த ஒரே தெய்வம் சரணமாகப் பற்றத் தக்கது என்ற தருமனின் வினு வுக்கு ஸ்ரீ பீஷ்மர் அளித்த பதில்:

**परमं यो महत्तेजः परमं यो महत्तपः ।**
**परमं यो महद्ब्रह्म परमं यः परायणम् ॥**

பரமம் யோ மஹத்தேஜ: பரமம் யோ மஹத்தப: |
பரமம் யோ மஹத்ப்ரஹ்ம பரமம் ய: பராயணம் ||

எது உயர்ந்த ஒளியோ, எது உயர்ந்த பெரிய தவமோ, எது உயர்ந்த பெரிய ப்ரஹ்மமோ அத் தகைய சிறப்புகளைப் பெற்றதே சரணம் அடையத் தக்க ஒரே தெய் வம் என்று கூறுகிறார்.

விஷ்ணு ஸஹஸ்ர நாமத்தின் முதல் ஸ்லோகமே இறைவனின் உண்மை நிலையை உணர்த்துகிறது.

**विश्वं विष्णुर्वषट्कारो भूतभव्यभवत्प्रभुः ।**
**भूतकृद् भूतभृद्भावो भूतात्मा भूतभावनः ॥**

சகல சத்குணங்களும் கொண்டு எல் லாவற்றுள்ளும் மறைந்து உறைபவ னும் எல்லாவற்றையும் தனக்குள் வச மாகச் செய்து கொள்பவனும் முக்கா லத்திலும் தலைவனானவனும் எல்லா பிராணிகளுக்கும் இருப்பை அளிப் பவனும், ஆத்மாவாக இருப்பவனும் பரிசுத்தமானவனும் பரமாத்மாவா வான்.

இத்தகைய இறைவனின் மஹத் துவத்தை யாவரும் அறிந்து வழி படச் செய்ய வேண்டும்.

கோயில் கட்டுபவரும் யாகங்களைச் செய்பவரும் அதற்கான பொருளை சமய மறுமலர்ச்சியை உண்டாக்கும் சத்காரியங்களுக்குப் பயன்படுத்தித் தங்கள் உளமார்ந்த ஆதரவை தரு வார்களானால் அவர்கள் கிடைத்தற் கரிய கர்ம யோக பலனை நிச்சயம் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை.

*

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D.PRESS, TIRUPATI-517501.

